# திருக்கோயில்

"என் கடன் பணி செய்து கிடப்பதே"





ஆறுமுகப் பெருமான், (திருச்செந்தூர்)

மாலை 12] சாதாரண—ஆடி—ஆகஸ்ட், 1970 [மணி 11

தமிழ் நாடு அரசின் அறநிலைய
ஆட்சித்துறை வெளியீடு.



காஞ்சிபுரம் வட்டம் திருமாகறல் ஈசுவரர் கோயிலில், வார வழிபாட்டுத் துவக்க விழாவில், அறநிலைய அமைச்சர் மாண்புமிகு திரு. கே. வி. சுப்பையா, B.A., அவர்களும், தவத்திரு குன்றக்குடி அடிகளார், M.L.C. அவர்களும், மற்றும் பல பெருமக்களும் கலந்து கொள்ளுதல். (8-4-70).

## பொருளடக்கம்



மூவண்ணப்படம் : திரிபுர சுந்தரியம்மை, திருக்கழுக்குன்றம்

அன்பளிப்பு : திரு. T. N. விசுவநாதக்குருக்கள், திருக்கழுக்குன்றம்

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

ஆண்டுச் சந்தா ரூ. 10/- தனி இதழ் விலை ரூ. ஒன்று

'திருக்கோயில்' இதழின் சந்தாதாரர்கள் ஆகச் சேர விரும்புபவர்கள் "திரு. ஆணையர் அவர்கள், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34" என்னும் முகவரிக்கு ரூபா பத்து அனுப்பி எப்போது வேண்டுமாயினும் சந்தாதாரர்கள் ஆகச் சேர்ந்து கொள்ளலாம்.

அல்லது, அவ்வவ் வட்டார அறநிலைய உதவி ஆணையாளர்களின் அலுவலகங்களிலும் மேற்படி சந்தாத் தொகையைச் செலுத்திச் சேரலாம்.

சந்தாதாரர்கள் தங்களுடைய சரியான முழு முகவரியைத் தெரிவித்துதவுதல், இதழ்கள் தவறுமற் சேர்தற்கு மிகவும் இன்றியமையாதது.

— ஆசிரியர்




மாலை 12 ]        சாதாரண — ஆவணி — ஆகஸ்டு, 1970        [ மணி 11

# இறையுணர்வு

[ ந. ரா. முருகவேள், M. A., M. O. L. ]

**முன்னுரை :**

மனிதனுக்கு எத்தனையோ பல வகையான உணர்ச்சிகள் உண்டு. அவைகளுள் இறையுணர்வும் ஒன்று. நம்மையும் அறியாமல் நமக்குள்ளே அஃது அமைந்து கிடக்கின்றது. கடவுள் இல்லை என்று சாதித்து வாதிப்பவருக்கும் உள்ளே கூட, அவ்வுணர்வு அமைந்து கிடக்கத்தான் செய்கின்றது. ஆனால் அஃது அவர்கள்பால் எதிர்மறை முறையில் (Perverted way) செயற்படுகின்றது. கடவுளை இகழ்பவர்களும் கூட, தாங்கள் பின்பற்றும் தலைவர்களைக் கடவுளைப் போலவே பாவித்து, ஒருவகையில் ஆர்வமிக வழிபாடு செய்து வருதலைக் காண்கின்றோம். புத்தர் பெருமான் கடவுணுண்மை பற்றி ஏதும் வற்புறுத்திக் கூறிற்றிலர். ஆயினும் அவருக்குப் பின்வந்த பௌத்தர்கள் அவரையே கடவுளாகக் கருதி, அவர் மீது கடவுள் தன்மைகளை ஏற்றி, அவரையே கடவுளாக வழிபடத்தலைப்பட்டனர்; அவர்தம் திருவுருவங்களைக் கடவுளின் திருவுருவங்களைப் போலவே நிற்றல் இருத்தல், கிடத்தல் ஆகிய பல்வேறு நிலைகளிலும் அமைத்து வழிபட்டு வருகின்றனர். 'ஜீவாத்மாவும் பரமாத்மாவும் தம்மின் வேறல்ல; இரண்டும் ஒன்றே' என்னும் கொள்கையினையுடைய ஆதிசங்கரர் தாமும், மனித குலம் உய்ந்து ஈடேறுதற்குக் கடவுள் உணர்வும் வழிபாடும் இன்றியமையாதன

என்றுகண்டு, தாமே அவற்றைக் கடைப்பிடித்து உலகுக்கு வழிகாட்டிருயளினர் (1). ஆதி சங்கரர் பாடியருளிய பஜகோவிந்தம், சுப்பிரமணிய புஜங்கம், சௌந்தர்யலகரி, சிவானந்தலகரி முதலிய சிறந்த துதி நூல்கள், அவர்தம் எல்லையற்ற பக்திச் சிறப்பினை இனிது விளக்கும்.

நம்மைவிட அறிவிலோ ஆற்றலிலோ செல்வத்திலோ பதவியிலோ சிறந்துயர்ந்து திகழ்பவர்களைக் காணுங்கால் எல்லாம், இயல்பாகவே நமக்கு ஒருவகை வியப்பும் உவப்பும், அச்சமும், அடக்கமும் ஏற்படுகின்றன. அவர்களைத் தொழுது வணங்கி, அவர்களின் அன்பையும் ஆதரவையும் பெற முயலுவது, பொதுவான நல்ல மனித இயல்பாகவே யாண்டும் காணப்படுகின்றது. இவ்வியல்பின் உணர்ச்சியும் சிறப்பும் மிக்க நிலையே, கடவுள் உணர்ச்சி எனலாம். நாம் நம்முடைய பலவகைக் குறைகளையும் சிறுமைகளையும் உணரத் தலைப்படுகின்றபோது, நம்மிலும் மேலான உயர்ந்த பேரறிவும் பேராற்றலும் பேரின்பமும் உடைய பரம்பொருள் ஒன்று உண்டு என்று நாம் உணரப் பெறுகின்றோம்! அத் தெளிந்த மனநிலையினைத் தான் கடவுளுணர்ச்சி அல்லது இறையுணர்வு என்று குறிப்பிடுகின்றோம்.

## தாயுமானவர் :



மனித வாழ்வில் சிலசில உணர்வுகள், நம்மிடையே சிலகாலம் வரையில் மறைந்து கிடந்து, பின்னர் வெளிப்பட்டு வளர்ந்து செயற்படுகின்றன. உதாரணமாக, 'பால் உணர்வு' (Sex-instinct) என்பதனைக் குறிப்பிடலாம். ஒரு குறிப்பிட்ட வயதில், பருவத்தில் அஃது ஏற்பட்டே தீர்கின்றது. குழந்தைமை நிலைமையிலும், இளம் பிள்ளைமை வயதிலும், பால் உணர்வு பெரிதும் தோன்றுவதில்லை. அப்போது அதனை நாம் இழிவாகவும் அருவருப்பாகவும் கூட நினைக்கின்றோம். ஆனால் காளைப் பருவம் அடையுங்கால், நம் மனப்பான்மை மாறுகின்றது. பாலுணர்வின் ஆற்றலை நாம் பாங்குற உணரப் பெறுகின்றோம். நாம் விரும்பினாலும் வெறுத்தாலும், உடன்பட்டாலும் மறுத்தாலும், எப்படியேனும் பாலுணர்ச்சி நம்மிடை அரும்பியே விடுகின்றது!

அது போலவே, ஒரு குறிப்பிட்ட சமயத்தில், ஏதேனும் ஒரு சூழ்நிலையில், நம் மனித வாழ்வில் எங்ஙனமேனும் நமக்குக் கடவுள் உணர்வு தோன்றி விடுகின்றது. முதலில் நாம் கடவுள் உணர்வின் அருமை பெருமைகளையும், அநுபவங்களையும் அவசியத்தினையும் உணராமல் இருந்த போதிலும், பின்னர் உணர வேண்டியவர்கள் ஆகிவிடுகின்றோம். அப்பொழுதுதான் நம்முடைய முன்னைய அறியாமையும் பிழையும் விளங்குகின்றன. நமது பேதைமை நிலையினை அறிந்து கொண்டு, பின்னர் நாமே நாணமுற்று வருந்துகின்றோம். இதனையே,

> **கன்னிகை ஒருத்தி சிற்றின்பம் வேம்பெனினும்**
> **கைக்கொள்வள் பக்குவத்தில் ;**
> **கணவன்அருள் பெறின்முனே சொன்னவாறு**
> **என்னெனக்**
> **கருதி நகை ஆவள்; அது போற்**
> **சொன்னபடி கேட்கும் இந்தப் பேதைக்கு**
> **நின்கருணை தோற்றிற் சுகாரம்பம் ஆம்...**

எனத் தாயுமான சுவாமிகள் அழகுறக் குறிப்பிட்டருளி யிருத்தல் காணலாம்.

## திருநாவுக்கரசர் :

திருநாவுக்கரசரும் இத்தகைய தொரு செய்தியினையே, தம்முடைய அநுபவமாகக் குறிப்பிட்டுள்ளார். திருநாவுக்கரசர் தம் இளமைப் பருவத்திற் சிலகாலம் சமண சமயம் சார்ந்திருந்தார். கடவுளில்லை என்றும் அவர் கட்டுரைத்து வந்தார் போலும்! 'ஏழையேன் நான் பண்டு இகழ்ந்தவாறே' என்று அவரே கூறி இரங்குமாறு போல, இறைவனைப் பழித்துப் பேசிக் காலத்தைக் கழித்து வந்தார் அவர்!

---

1. "What is most curious is that a philosopher, such as SANKARA, the most decided monist, and the upholder of Brahman, as a neuter, as the cause of all things, is reported to have been a worshipper of idols and to have seen in them despite all their hideousness, symbols of the Deity, useful, as he thought, for the ignorant, even though they have no eyes as yet to see what is hidden behind the idols, and what was the true meaning of them".

—Max Muller.

அவருக்கும் வாழ்க்கையில் ஏதோ ஒரு குறித்த சூழ்நிலை எய்தியது; பக்குவம் வந்தது. அவர் அறிவும் தெளிவும் அடைந்தார். இறையுணர்ச்சி பெற்றார். கடவுளைத் தேடி எங்கெங்கோ அலைந்தார். எங்கும் உள்ள கடவுள், தம் உள்ளத்திற்குள்ளே இருப்பதைக் கண்டு உணர்ந்தார். கடவுள் தம் உள்ளத்திலேயே எழுந்தருளி வீற்றிருக்கவும், அவர் இல்லை என்று பிறழ நினைத்துக்கொண்டு, இதுகாறும் அவரைப் புறங்கூறி இகழ்ந்து வந்தோமே! நம் இகழ்வுரைகளை யெல்லாம், இறைவன் நமக்குள்ளே நம்மோடு ஒன்றி உடனிருந்து, இதுவரையிற் கேட்டுக் கொண்டு அன்றோ இருந்திருக்கின்றார்! நாம் எத்தகைய தவறு செய்தோம்? என்று நினைத்துக் கழிவிரக்கம் கொள்கின்றார்!

**கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க்**
**காலத்தைக் கழித்துப் போக்கித்**
**தெள்ளியேன் ஆகி நின்று**
**தேடினேன் நாடிக் கண்டேன்!**
**உள்குவார் உள்கிற் றெல்லாம்**
**உடன்இருந் தறிதி என்று**
**வெள்கினேன்! வெள்கி நானும்**
**விலாஇறச் சிரித்திட் டேனே!**

## உடலமைப்பும், இறையுணர்ச்சியும்:

இறையுணர்வு பெறுவதற்கு நாம் வேறு பிற சாதனங்களோ, சான்றுகளோ தேட வேண்டுவதில்லை. நம்முடைய உடம்பின் அமைப்பினை ஒரு சிறிது உன்னிப் பார்த்து உணர்ந்தாலும் கூட, நமக்குக் கடவுளுணர்ச்சி ஏற்படுதல் திண்ணம்.

நமது மனித உடம்பில் 600 தசை நார்கள், 1000 மைல் நீளமுள்ள இரத்தக் குழாய்கள், 550 இரத்த நாளங்கள், 16 சதுர அடிப் பரப்புடைய மென்தோல், 15 லட்சம் வியர்வைக் கோளங்கள், மூச்சுப் பையில் தேன்கூடு போன்ற 70 கோடி கண்ணறைகள், $3 \times 10^{12}$ நரம்புச் செல்கள், 300 லட்சம் வெள்ளையணுக்கள். $18 \times 10^{13}$ சிவப்பணுக்கள், $2\frac{1}{2}$ லட்சம் தலை மயிர்கள் ஆகியவை உள்ளன. 70 ஆண்டுகளில் நமது இதயம் 250 கோடி தடவைகள் துடிக்கின்றது. 5,00,000 டன் இரத்தத்தை வெளியேற்றி உடம்பிற் பரவச் செய்கின்றது. நாள் தோறும் 36 அவுன்சு அளவு உமிழ் நீர் சுரந்து விழுங்கப்படுகின்றது. 120 முதல் 240 அவுன்சு வரை வயிற்றிற் செறிநீர் ஊறி, உணவைச் செறிப்பித்துக் கிருமிகளைக் கொல்லுகின்றது (2).

இதுபோன்ற எத்துணையோ பல வியத்தகு செயல்களை யெல்லாம் எண்ணிப் பார்க்கும் போது, நாம் கடவுள் உணர்ச்சி அடையப் பெறுதல் திண்ணம்.

## எமர்சன்:

“கடவுள் ஒருவர் உண்டு என்பது, நம்மைச் சுற்றி நாடோறும் நடைபெறுகின்ற செயல்களை ஒரு சிறிது உன்னிப் பார்த்தாலே நமக்குப் புலனாகும். நமக்கு மேற்பட்ட இயற்கைச் சட்டம் ஒன்று இயங்கிக் கொண்டிருக்கின்றது. அது தான் உலக நிகழ்ச்சிகளை உருவாக்கி ஒழுங்கு படுத்தி வருகின்றது, ஏதோ நம்மால்தான் எல்லாம் நடப்பதுபோலக் கருதிக் கொண்டு நாம் மேற்கொள்ளும் முனைப்பு மிக்க செயல்கள், ஒரு வகையில் தேவையில்லாதனவும் பயனற்றனவுமே யாகும். எளிய இயல்பான ஆடம்பர மற்ற செயல் நிலையில்தான், நாம் வன்மையுடையவர்களாகின்றோம். செருக்கற்ற பணிவுடைமையினால்தான், நமக்குத் தெய்விகநிலை கிடைக்கின்றது. நம்பிக்கையும் அன்புமே நம்முடைய ஏராளமான கவலைச் சுமைகளினின்று நம்மை விடுவித்து, நமக்கு நலம் விளைவிக்கின்றன. ஓ! என் அன்பிற் சிறந்த உடன்பிறப்பாளர்களே! கடவுள் இருக்கின்றார்!”

---

2. “There are in the human body 600 muscles, 1000 miles of blood vessels, 550 arteries, 16 Square feet of skin, $1\frac{1}{2}$ million sweat glands, 700 million cells in honeycomb fashion in the lungs, $3 \times 10^{12}$ nerve cells, 30 million white corpuscles, $18 \times 10^{13}$ red corpulcles, and 2,50,000 hairs on the head. In 70 years, the heart beats 2,500 million times and lifts 5,00,000 tons of blood. 3 pints of saliva are swallowed daily and the stomach generates 5 to 10 quarts of gastric juice daily which digest the food and destroys the germs ..”

—Louis Leguen.

''இயற்கைப் பொருள்களினுள்ளும், ஒவ்வொரு மனிதனின் உள்ளத்திற்கு மேலும், கடவுள் என்ற ஓர் உயிர்ப்பொருள் உலவி நிலவி வருகின்றது. அதுவே நம்மை இயக்கி நிற்கின்றது, உலக அமைப்பை நாம் ஏதும் பிறழச் செய்து விடாதபடி அதுதான் கவனித்துக் கொள்ளுகின்றது. உலகப் பொருள்களி லெல்லாம், அது தன்னுடைய ஆற்றல் மிக்க கவர்ச்சித் திறனைப் பாய்ச்சி ஊடுருவச் செய்துள்ளது. அதன் அறிவுரையை உடன்பட்டு ஒழுகும் பொழுது, நாம் வளர்ச்சியும் செழிப்பும் அடைகின்றோம். அதன் சிற்றுயிர்களை நாம் வருத்த முற்படும்போது, அது நம் கைகளைப் பிணித்து விடுகின்றது. அல்லது நம்மையே தாக்குமாறு செய்கின்றது. உலகப் பொருள் அமைப்புகள், செயல்கள் யாவுமே, கடவுள் ஒருவர் உண்டு என்று நமக்கு உணர்த்தி, நம்பிக்கை கொள்ளச் செய்யும் வகையிலேயே அமைந்திருக்கின்றன *(3)*'' என்று ரால்ப் வால்டோஎமர்சன் என்னும் அமெரிக்க நாட்டுப் பேரறிஞர் கூறுவதும், ஈண்டு நம்மனோர் அறிதற்கு உரியது.

---

3. "A little consideration of what takes place around us every day would show us that a higher law than that of our will, regulates events; that our painful labours are very unnecesary and altogether fruitless; that only in our easy, simple, spontaneous action are we strong, and by contenting ourselves with obedience we become divine. Belief and love will relieve us of a vast load of care. O! my brothers! God exists.

There is a soul at the centre of nature and over the will of every man, so that none of us can wrong the universe. It has so infused its strong enchantment into nature that we prosper when we accept its advise; and when we struggle to wound its creatures, our hands are glued to our sides, or they beat our own breasts. The whole course of things goes to teach us faith."

—Ralph Waldo Emerson

## தமிழ்ச் சான்றோர்கள் :

இறையுணர்ச்சி யுடையவர்களாக விளங்குதல், ஒரு சிறந்த பண்பு. பெரியவர்கள் எல்லோரும் அதனைச் சிறந்த குணங்களுள் ஒன்று என மதித்துள்ளனர். ''குலன் அருள் தெய்வங் கொள்கை, கலைபயில் தெளிவு, கட்டுரை வன்மை'' என்னும் நூற்பாவில், கடவுளுணர்ச்சி ஆகிய தெய்வங்கொள்கையும், ஓர் இன்றியமையாத சிறந்த பண்பாக வற்புறுத்தப் பெற்றிருத்தல் காணலாம்.

''உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்து
அலகையா வைக்கப் படும்''

எனத் திருவள்ளுவரும், நாத்திகர்களைச் சுட்டிக் கடிந்து கூறியுள்ளார்.

திருமுருகாற்றுப்படையில், ஆசிரியர் நக்கீரர் கடவுளுணர்ச்சி யில்லாதவர்களை ''முரணுநர்'' *(243)* எனக் குறிப்பிட்டு இழித்துரைக்கின்றார்! புறநானூற்றுச் செய்யுள் *(29)* ஒன்றில், 'புண்ணிய பாவங்கள் இல்லை என்று அழித்துச் சொல்லும் கொடிய தீயவர்களுடன் நீ எஞ்ஞான்றும் சேராதே!' என்னும் கருத்தில்,

நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லை என்போர்க்கு இனன் ஆகிலியர்!

என உறையூர் முதுகண்ணன் சாத்தனார்என்னும் புலவர் பெருமான், சோழன்நலங்கிள்ளி என்னும் அரசனுக்கு அறிவுரை கூறிப்பாடியருள்கின்றார்!

மாணிக்கவாசகர், தம் திருவாசகத்தில் 'போற்றித் திருவகவல்' என்னும் சிறந்த பகுதியில்,

''ஆத்தம் ஆனார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்''

எனக் கூறி வருந்துகின்றார்.

நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே!
படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்;
தடைஒன் றின்றியே தன்அடைந் தார்க்கெலாம்
அடைய நின்றிடும் ஆனைக்கா அண்ணலே!

எனத் திருநாவுக்கரசர், நமக்குச் சிறந்த எச்சரிக்கை செய்தருள்கின்றார். ''காரணகாரிய வாதங்களைக் கொண்டு, உங்கள் அறிவினாற் கடவுளை நீங்கள் சோதித்து அறிய முற்படாதீர் கள். நம்பிக்கையும் விசுவாசமும் கொண்டு மனம்பற்றி வாழ்மின்கள்! அதனால் உங்க ளுடைய மாபெரும் துக்கங்களெல்லாம் மாய்ந்து நீங்கியொழிந்து, நலமுற்று வாழப் பெறுவீர்கள்!'' என்று ஞானசம்பந்தர் நவிலு கின்றார்.

**ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்**
**சோதிக்க வேண்டா! சுடர்விட்டுளன் எங்கள்**
**சோதி!**
**மாதுக்கம் நீங்கலுறுவீர்! மனம்பற்றி வாழ்மின்!**
**சாதுக்கள்மிக்கீர்! இறையே வந்து சார்மின்களே!**

—திருப்பாசுரம்.

**காந்தியடிகள் :**

''உலகம் எங்கணும் ஓர் ஒழுங்குமுறை நிலவுகின்றது. உலகிலுள்ள ஒவ்வொரு பொருளையும், வாழ்கின்ற ஒவ்வோர் உயிரை யும், மாற்ற முடியாத ஆற்றல் மிக்க ஒரு பெருஞ் சட்டம் ஆட்சி புரிந்து வருகின்றது. அஃது ஒரு குருட்டியற் சட்டம் அன்று. ஏனெனில், குருட்டியற் சட்டமாயின், உயிரும் அறிவும் உடைய பொருள்களின் இயக்கத்தை வரையறை செய்து நடத்த, அதனால் இயலாது. எனவே, வாழ்வனைத்தையும் ஒரு வரையறை செய்து நடத்துவிக்கும் அந்தச் சட்டம் தான் கடவுள். சட்டமும், சட்டத்தை வகுப்பவனும் ஒன்றே. நாம் அறிந்து கொள்ளாமை காரண மாகச் சட்டத்தினையோ, அதனை வகுத்த வனையோ இல்லை என்று சொல்லுவது பொருந் தாது. உலகில் நிலவும் அரசின் நெறியினை அறியாமையினாலோ, இல்லை என்று சொல்லு வதனாலோ, நமக்கு ஏதும் பயன் விளையாது. அதுபோலவே நாம் கடவுளை இல்லை என்பத னால், நமக்கு அவர்தம் சட்டங்களினின்று விடுதலை ஏற்பட்டு விடாது. அரசாங்கத்தின் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு நடப்பதனால், நம் வாழ்க்கை தொல்லைகள் இன்றி எளியதும் இனியதுமாக அமையும். அங்ஙனமே கடவுளின் இயற்கைச் சட்ட திட்ட நெறிமுறைகளுக்கும் நாம் கட்டுப்பட்டு ஒழுகினால், நம்முடைய வாழ்க்கைப் பயணம் எளிமையும் இன்பமும் நிறைந்ததாக அமைந்து விடும்'' (4) எனக் காந்தியடிகள் அறிவுறுத்துகின்றார்.

**முன்னுரை :**

இங்ஙனம் சான்றோர்கள் எல்லோருமே, ஒருமுகமாகக் கட்டுரைத்து வற்புறுத்தி அறி வுறுத்தி யருளுதலைக் காண்கின்றோம். ஆதலின் நாம் அனைவரும் இறையுணர்வு உடையவர் களாகத் தூய வாழ்க்கை வாழ்ந்து, நலம் பெற முயலுவோமாக!

—ஆசிரியர்.

---

4. There is orderliness in the universe; there is an unalterable Law governing everything and every being that exists or lives. It is not a blind law; for no blind law can govern the conduct of living beings.

That law, then, which governs all life is God. Law and the Law-Giver are one. I may not deny the Law or the Law-Giver because I know so little about It or Him.

Just as my denial or ignorance of the existence of an earthly power avail me nothing, even so my denial of God and His law will not liberate me from its operation, Whereas humble and mute acceptance of divine authority makes life's journey easier even as the acceptance of earthly rule makes life under it easier".

—Mahatma Gandhiji.

# ஆசாரக் கோவை

[ ந. ரா. முருகவேள், M. A., M. O. L. ]

## முன்னுரை :

ஆசாரக் கோவை என்பது, சங்கம் மருவிய பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகும். சங்க காலத்திலும், அதற்கு அடுத்துச் சிறிது காலத்திலும் தோன்றிய நூல்களுள் ஒன்றாத லின், இஃது இற்றைக்குச் சற்றேறக்குறைய 1800 ஆண்டுகளுக்கு முற்பட்டது எனலாம். இதன் ஆசிரியர் பெருவாயில் முள்ளியார் என்னும் சங்க காலப் புலவர் ஆவர்.

ஆசாரம் என்னும் சொல், நல்லொழுக்கம் எனப் பொருள்படும். ஆசிரியர் திருவள்ளுவர், "அச்சமே கீழ்களது ஆசாரம்'' என்னும் திருக் குறளில், ஆசாரம் என்னும் சொல்லை, இற்றைக்கு ஏறத்தாழ 2,000 ஆண்டுகளுக்கு முன்னரே கையாண்டிருத்தல் காணலாம். நல்லொழுக்கமாகிய ஆசாரங்களைத் தொகுத்து, ஒழுங்கு படுத்திக் கோவையாக்கிச் செய்யப் பெற்றதனால், இந்நூலுக்கு **ஆசாரக் கோவை** என்னும் பெயர் அமைந்தது.

மக்கள் வாழ்க்கைக்கு நன்மைபயக்கக்கூடிய பல வகை நல்லொழுக்கங்களைப் பற்றி எடுத்துக் கூறி அறிவுறுத்தும் முறையில் இந்நூல் அமைந் திருத்தலின், செய்திகளை அறிவுறுத்துகின்ற **செப்பல்** ஓசையில் அமைந்த, இன்னிசை வெண்பா, நேரிசை வெண்பா, குறள் வெண்பா, பஃறொடை வெண்பா முதலிய வெண்பா வகை களால், இந்நூல் அமைந்திருக்கின்றது. இந் நூலாசிரியர் சைவ சமயத்தைச் சார்ந்தவரென் பதும், இவர்தம் ஊரின் பெயர் **வண்கயத்தூர்** என்பதும், தற்சிறப்புப் பாயிரச் செய்யுளால் விளங்குகின்றன.

## நூற் பெருமை:

ஆசாரக்கோவையென்னும் இந்நூலின் செய்யுட்களை உரையாசிரியர்கள் ஆங்காங்கே தத்தம் நூல்களில் மேற்கோளாக எடுத்துக் காட்டுகின்றனர். உச்சிமேற் புலவர்கொள் **நச்சினார்க்கினியர்** தாம் இயற்றிய **பத்துப்பாட்டு** உரையிலும், **சீவக சிந்தாமணி** உரையிலும், ஆசாரக் கோவையின் செய்யுட்கள் பலவற்றை மேற்கோள்களாக எடுத்துக் காட்டுவதனால், இற்றைக்கு ஏறத்தாழ 600 ஆண்டுகளுக்கு முன்னரே, இந்நூல் பெரிதுமிகப் போற்றப் பட்டுவந்தது என்னும் உண்மை புலனாகின்றது. இவ்வாறே **நன்னூல்**, **இலக்கணவிளக்கம்** முதலிய நூல்களின் உரையாசிரியர்களும், தத்தம் நூல்களில் இதன் செய்யுட்களை எடுத்துக் கையாண்டு போற்றியிருக்கின்றனர். பிற் காலப் பாண்டிய அரசர்களுள் மிகவும் சிறந்த வரும் பெரும்புலமை வாய்ந்தவரும் சிறந்த பல நூல்களை இயற்றி உதவியவரும் ஆகிய **அதிவீரராம பாண்டியர்** (கி. பி. 1564—1604) தாம் இயற்றிய **காசி காண்டம்** என்னும் நூலில் பலஇடங்களில் இவ்வாசாரக்கோவைச் செய்யுட் களின் கருத்துக்களை, ஆங்காங்கே எடுத்துப் போற்றி விளக்குகின்றார். இதனாலும் இந் நூலின் அருமை பெருமைகள் செவ்விதிற் புலனாகின்றன.

---

* காஞ்சி காமகோடிபீடம் ஜகத்குரு ஸ்ரீலஸ்ரீ சங்கரா சாரிய சுவாமிகள் அவர்களின் அருளாதரவில், உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களுக்காகக் காஞ்சிபுரத்தில் நடத்தப்பெற்ற நீதிபோதனை வகுப்புக் கோடைக்காலப் பயிற்சியின்போது ஆற்றிய சொற்பொழிவினைத் தழுவியது.

—ஆசிரியர்.

## நூற்பொருள் :

ஒரு மனிதன் தன் வாழ்க்கையில் உண்ணல் உடுத்தல், உறங்குதல், நீராடுதல் முதலிய நாட் கடமைகளை யெல்லாம் எவ்வாறு செய்தல் வேண்டும் என்பது பற்றிய செய்திகளை எல்லாம் இந் நூல் சுருக்கமாகவும், தெளிவாகவும் தொகுத்துக் கூறுகின்றது. செய்யத்தக்கன இவை, செய்யத்தகாதன இவை, இன்ன செயலைச் செய்தால் இன்ன நலத்தைப் பெற லாம், இன்னதனைச் செய்தால் இத்தகைய கேடு வரும் என்னும் முறையில் இந்நூல் அழகுற விளக்கிச் செல்கின்றது. ஆங்காங்கே ''முந்தையோர் கண்டமுறை'' ''பேரறிவாளர் துணிவு'', ''நல்லறிவாளர் செயல்'' என இந் நூல் குறிப்பிடுவதனுல், இந்நூல் கூறும் ஆசார மாகிய நல்லொழுக்கங்கள் பலவும் பண்டைப் பேரறிஞர்கள் பலரும் தத்தம் அனுபவத்தில் ஆராய்ந்து கண்டுணர்ந்த அரிய முடிவுகளேயாம் என்பது பெறப்படும். எனவே இந்நூலின் பொருளை ஈண்டு இயன்றவரை சுருக்கமாகத் தொகுத்துக் காண்போம்.

## ஆசார வித்து :

பிறர் செய்த உதவியை என்றும் மறவாது போற்றுதல், பிறர் செய்யும் குற்றங்களைப் பொறுத்துக் கொள்ளும் தன்மை, எவரிடத்தும் இனிமையாகவே பேசுதல், எந்த உயிருக்கும் துன்பம் செய்யாதிருத்தல், நல்ல நூல்களைக் கற்றுணர்தல், உலக நடை அறிந்து ஒழுகுதல், இது நற்செயல் இது தீச்செயல் என்று பகுத் துணரும் அறிவினை உடையராதல், நல்ல இயல்பு உடையவர்களுடன் நட்புச் செய்து கொள்ளுதல், ஆகிய இந்த எட்டும் நல்லொழுக் கத்தின் வளர்ச்சிக்கு விதை போன்றனவாகும்.

நல்லொழுக்கத்திலிருந்து சிறிதும் பிறழாது நடப்பவர்கள், நற்குடிப் பிறப்பு, நீண்ட வாழ்க்கை, செல்வம், கல்வியறிவு, வனப்பு, நிலக்கிழமை, மிகுந்த புகழ், நோயின்மை முதலிய நலங்களைப் பெறுவார்கள்.

ஆசிரியர்க்குக் காணிக்கை கொடுத்தல், பிறர்க்கு இயன்ற உதவி புரிதல், பொறிபுலங் களை நல்வழியில் செலுத்துதல், கற்கவேண்டு வனவற்றைக் கற்றல் என்னும் இந்நான்கையும் அறம், பொருள், இன்ப நெறிகளுக்கு ஏற்றபடி பாதுகாத்துக் கொண்டு நடத்துதல் வேண்டும். இல்லையேல் பயன்தராமல் கெட்டொழியும்.

## வைகறைக் கடமைகள் :

ஒவ்வொருவனும் வைகறையாமம் ஆகிய விடியற்காலையிலேயே துயிலுதலை விட்டு எழுந்து கொள்ளுதல் வேண்டும். எழுந்து, அன்று தான் செய்வதற்குரிய நல்லறங்களையும், சிறந்த பொருள் தேடும் முயற்சிகளையும் பற்றிச் செவ்வனே சிந்தித்தல் வேண்டும். தாயையும், தந்தையையும் தொழுது வணங்கிக்கொண்டு எழுந்து, தனது நாட் கடமைகளைச் செய்வதற் குத் தொடங்க வேண்டும். இதுவே நம் முன்னோர் கள் ஆராய்ந்து கண்டு அமைத்துச் சென்ற நல்லொழுக்க முறையாகும்.

எச்சில் என்ருல், நாம் பொதுவாக வாய் எச்சிலை மட்டுமே நினைவு கூர்கின்ரோம். வேறு பல எச்சில்களும் உண்டு. மல சலம் கழித்தல், இணைவிழைச்சு, இதழ் பருகல் என்னும் நான்கு எச்சில்களையும் நாம் தக்கவாறு பாதுகாத்துக் கொள்ள வேண்டும். இந்நான்கு எச்சில்களுள் ஏதேனும் ஒன்றை உடையவரும், பசுக்கள், அந்தணர்கள், தெய்வத்திருவுருவங்கள், உச்சந் தலை ஆகியவற்றைத் தீண்டுதல் கூடாது. அவ்வாறே புலையன் சந்திரன் சூரியன் விழுகின்ற விண்மீன் நாய் முதலியவற்றை உற்று நோக்கு தல் கூடாது. இவ் எச்சில்கள் நேர்ந்தால் அவற்றைப் போக்கித் தூய்மை செய்து கொள்ளாத முன்பு, அறிவு உடையவர்கள் எதனையும் ஓத மாட்டார்கள்; யாரோடும் பேச மாட்டார்கள்; கண்துயில மாட்டார்கள்.

விடியற்காலையில் ஆல் வேல் முதலிய குச்சி களால் பல்லைத்துலக்கி, முகம் கழுவிக்கொண்டு தன் வழிபடு கடவுளை, தான் அறிந்த முறைப் படி வணங்கித் துதித்து, அதன் பின்னர்த் தனக் குரிய நாட் கடமைகளை ஒருவன் செய்யத் தொடங்குதல் வேண்டும். மாலை வேளைகளில் தான் வணங்கும் தெய்வத்தை நின்றுகொண்டு தொழாமல், ஆர அமர்ந்திருந்து தியானித்துத் தொழுதலே முறையாகும்.

கடவுள் வழிபாடு செய்யத் தலைப்படும் போதும், தீய கனவுகள் கண்ட இடத்தும்,

தூய்மைக் குறைவு நேர்ந்த பொழுதும், உணவை வாந்தி செய்த இடத்தும், தலை முடியைக் கலைத்த இடத்தும், உணவு கொள்வ தற்கு முன்பும், படுக்கையில் நெடுநேரம் தூங்கிய பின்பும், இணைவிழைச்சு செய்த பிறகும், தூய்மையற்ற பிணியாளர்கள் முதலி யோரைத் தீண்டிய இடத்தும், மலசலம் கழித்த காலத்தும், யாவரும் இன்றியமை யாது நீராடுதல் வேண்டும்.

## ஆடை அணிதல் :

ஆடை அணிதல் நாகரிகத்தின் அடை யாளம். ஆடை அணிதற்குரிய சில விதிகளை யும் கூட, ஆசாரக்கோவை கூறுகின்றது. நீராடும்போது ஆடையில்லாமல் இருத்தல் கூடாது. இடுப்பில் ஆடை ஒன்றை அணிந்து கொண்டே நீராடுதல் வேண்டும். உணவு கொள்ளும்போது ஒற்றை ஆடை அணிந்திருத் தல் கூடாது. தோளில் மேலாடை ஒன்றும் அணிந்திருத்தல் வேண்டும்.உடுத்த ஆடையைத் தோய்க்கும்போது அதனை நீர் நிலையில் பிழிதல் கூடாது. அறிஞர்கூடிய அவைக் களத்திற்குச் செல்லுங்கால் மேலாடையின்றி, ஓர் ஆடையை மட்டும் உடுத்திச் செல்லுதல் ஆகாது. இது நம் முன்னோர்கள் கண்ட ஒழுக்க முறையாகும்.

தலையில் தடவிய எண்ணெயை எடுத்து, உடலின் வேறு பகுதிகளில் தேய்த்தல் கூடாது. பிறர் உடுத்த அழுக்கு ஆடையையும், பிறர் அணிந்த செருப்பினையும் நாம் தீண்டுதலும் ஆகாது.

நீரின் கண் தம் நிழலை விரும்பி நோக்குத லும், தரையைக் கீறுதலும், இராக் காலத்தில் மரத்தின் அடியில் சென்று இருத்தலும் குற்றங் களாகும். நீராடுங் காலத்தில் நெடுநேரம் நீந்தி நீர்நிலையைக் கலக்குதலும், எச்சிலை உமிழ்தலும், நீரில் மூழ்கி நெடுநேரம் மூச்சடக்கி இருத்த லும் விளையாடுதலும், தலையை விடுத்துக் கழுத் தளவில் மட்டும் குளித்தலும் குற்றங்களாகும். நிலம், நீர், தீ, வளி, விசும்பு என்னும் ஐந்து பூதங்களையும், அந்தணர் பசுக்கள் ஞாயிறு, திங்கள் முதலியவற்றையும் நாம் ஒருபோதும் இகழ்தல் கூடாது.

## ஐம்பெருங் குரவர் :

அரசன் ஆசிரியர் தாய் தந்தை தமையன் என்னும் ஐவரும், நம் வணக்கத்திற்கு உரிய சிறந்த பெரியோர்கள் ஆவர். இந்த ஐவரையும் நாம் கடவுளுக்குச் சமமாக மதித்துத் தொழுது வணங்குதல் வேண்டும். இஃது அனைவரும் உடன்பட்டு இயைந்த சிறந்த நெறியாகும்.

பெரியோர்கள் சொல்லைப் புறக்கணித்து நாமே நம் மனம் போனபடி எதனையும் செய்தல் கூடாது. ஏற்றுக் கொண்ட விரதத்தை நிறை வேற்றாமல் குறையாக விடுதல் கூடாது. கொண்ட விரதத்தை மறத்தல் ஆகாது. உவாக் காலங்களில் பேருண்டி கொள்ளுதலும், பயன்தரும் மரங்களை வெட்டுதலும் கூடாது.

## உண்ணும் முறை :

மனித வாழ்க்கைக்கு உணவு முக்கியம். ஆதலின் நாம் உண்ணும்போது ஒரு சில நல்லொழுக்க முறைகளைக் கடைப்பிடித்தல் வேண்டும். உண்ணுவதற்கு முன் நீராடுதல் வேண்டும். அல்லது கை கால்களைக் கழுவுதல் வேண்டும். உண்ட பிறகு வாயை நன்கு தூய்மையுறக் கொப்பளித்துக் கழுவுதல் வேண் டும். உண்ணுவதற்கு முன்னர் உண்கலத்தைச் சுற்றி நீர் இறைத்து, இறைவனைத் தியானித்து வழிபட்டு உண்ணுதல் வேண்டும். உணவு கொள்ளுதற்கு நெடுநேரத்தை வீணிற்போக்கு தல் முறையன்று. கால் கழுவிய நீரின் ஈரம் புலர்வதற்கு முன்பே உண்ணத் தொடங்குக. கால் கழுவிய ஈரம் காயாமல் படுக்கைக்குச் செல்லுதல் ஆகாது. உண்ட பின்னும் சிறிது நேரம் கழித்தே உறங்கப்புகுதல் நலம். உண்ணும் பொழுது கிழக்கு முகமாக அமர்க. தூங்கிவிழாமலும், அசைந்து ஆடாமலும், வீண் பேச்சுப் பேசாமலும், வேறு எதனையேனும் சிந்தித்துக் கொண்டு இராமலும், சோறு முதலியன சிதறிக் கீழே விழாமலும், நல்ல முறையில் அமர்ந்து, நன்றாகச் சுவைத்து, மென்று உணவு கொள்ளுதல் நலம் பயக்கும். உண்ணுவதற்கு முன்னர் விருந்தினர்கள், வய தானவர்கள், பசுக்கள், பறவைகள், சிறு குழந்தைகள் ஆகியவர்களை முதலில் உண்ணச் செய்தல் வேண்டும். அதற்குப் பின்னரே நாம்

உண்ணுதல் முறை. ஒழுக்கத்தில் தவருதவர்கள் இந்நெறியைக் கடைப்பிடிப்பார்கள்.

வாயிற்படிக்கு நேராக இருந்து உண்ணுதலும், வாயிற்படிக்கு நேரே கட்டிலிட்டுப் படுத்தலும் குற்றமாகும். படுத்துக்கொண்டே உண்ணுதல், நின்றுகொண்டே உண்ணுதல், வெள்ளிடை (மைதானம்) ஆன இடத்தில் உண்ணுதல், சுவையை விரும்பி அளவுக்கு மேல் உண்ணுதல், படுக்கும் கட்டிலின் மேலிருந்து உண்ணுதல் முதலியன குற்றங்களாகும். உண்ணும் பொழுது நமது வரிசையில் நம்மை விடப் பெரியவர்கள் இருந்தால், அவர்கள் உண்ணுவதற்கு முன்னர் நாம் உண்ணுதலும், அவர்கள் எழுந்திருப்பதற்கு முன்னர் நாம் எழுந்திருத்தலும், அவர்களை இடித்துக் கொண்டு நெருக்கமாக இருத்தலும் கூடாது. உண்ணும் போது இனிப்புடைய பண்டங்களை முதலிலும், கசப்பான பண்டங்களை இறுதியிலும்; ஏனைய சுவையுடைய பண்டங்களை இடையிலும் உண்ணுதல் முறையாகும். நீர் அருந்துங்கால் இரண்டு கைகளையும் சேர்த்துப் பிடித்து அருந்துதல் ஆகாது. பெரியோர்கள் கொடுக்கும் பொருளை ஒற்றைக் கையினுல் வாங்குதலும், நாம் அவர்க்கு ஒன்றை ஒற்றைக் கையால் கொடுத்தலும் கூடாது. நம் உடம்பை, உடம்பில் எங்கேனும் தினவு எடுத்தால் இரண்டு கைகளாலும் விகாரமாகச் சொரிதல் கூடாது.

## உறங்கும் முறை :

மாலைப்பொழுதில் படுத்துத்தூங்குதல், வேற்றூர்க்குத் துணையின்றி வழி நடந்து செல்லுதல், தனியே உணவு கொள்ளுதல், பிறரிடம் வெகுண்டு சண்டையிடுதல் முதலியன கூடாது. இராக் காலத்தில் இருட்டில் புறம்போகாமல் பாதுகாப்பான ஓர் இடத்தி்ல் தங்கிப் பள்ளி கொள்ளுதலே முறை. படுக்கச் செல்லும் முன் கடவுளை வணங்கி வடக்குத் திசையிலும், வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு தென்மேற்கு முதலிய திசைகளிலும் தலை வைக்காமல், உடம்பில் போர்வை இட்டுக்கொண்டு படுத்தல் நலம். தெய்வத் திருவுருவங்களுக்கும், அந்தணர்களுக்கும், இடையில் புகுந்து



நுழைந்து செல்லுதல் ஆகாது. யாரேனும் தும்மினுல் நீடு வாழ்க என்று வாழ்த்துவது பெரியவர்கள் பண்பு. அங்ஙனம் நாம் தும்மும்பொழுது, பெரியோர்கள் வாழ்த்தினுல், அதற்கு நன்றி தெரிவித்து அவர்களை வணங்குக. நம்மோடு ஒத்த நண்பன் எதிரே வந்தால், அவன்பால் இன்னுரை கூறி அவனேடு சிறிது தூரம் உடன் செல்லுக.

நல்ல புல் வளர்ந்துள்ள இடம், பயிர் வளர்ந்துள்ள நிலம், பசுவின் சாணம், சுடுகாடு, பலரும் நடக்கின்ற வழி, நீர் நிலை, திருக்கோயில், நிழலுள்ள இடம், பசுக்கள் நிற்கும் இடம், வெண் சாம்பல் முதலிய பத்து இடங்களிலும், நாம் எச்சில் உமிழவோ, மலசலம் கழிக்கவோ கூடாது. பகற்பொழுதில் தெற்கு நோக்கியும், இரவில் வடக்கு நோக்கியும் இருந்து மலசலம் கழித்தல் கூடாது. ஓமத்தீ அல்லது வேள்வித் தீயைப் பகற்பொழுதில் நீர் ஊற்றி அவித்தல் ஆகாது. தண்ணீரில் நின்றுகொண்டும், நடந்து கொண்டும் இல்லாமல்' ஒரு கலத்தில் நீரை முகந்து கொண்டு வாய் அலம்புதல் வேண்டும்.

## குற்றமான செயல்கள் :

விளக்குக்கும் ஒருவருக்கும் நடுவே ஊடறுத்துச் செல்லுதல், அவரின் மேல் உமிழ்தல், பிறர் உடுத்த அழுக்காடையை அணிதல், பிறர் மீது தமது ஆடை படும்படி செல்லுதல், பலர் நடுவில் ஆடையை உதறுதல் முதலியன குற்றமாகும்.

பிறன் மனைவியை விரும்புதல், கள்குடித்தல், களவு செய்தல், சூதாடுதல், கொலை செய்தல், ஆகியவற்றை மனத்தாலும் நினைத்தலாகாது, இவைகள் பிறர்பழிப்பதற்கு இடமாவதோடு. நரகத்திற்கும் ஏதுவாகும்.

பொய் பேசுதல், கோள் சொல்லுதல், பிறர் பொருளைக் கவர்தல், பொருமைப் படுதல் என்னும் இந்நான்கினையும் நாம் மனத்தினுலும்

நினைத்தல் கூடாது. நினைப்பின், வறுமை எய்தி ஐயம் (பிச்சை) புகுவிக்கும்; நரகத்தில் செலுத்தும்; இறைவனின் சீற்றத்திற்கு ஆளாக்கும்.

தமக்கென்று மட்டும் உணவு சமைக்க உலை ஏற்றுதல்; நமக்கு உடல் நலம் பெருகும் என்று எண்ணி ஊன் உணவை உட்கொள்ளுதல், அடுக்களையில் (சமையலறையில்) எச்சிற்படுத்துதல் முதலியன கூடாது. மனை உறை தெய்வங்களுக்கு நிவேதனம் செய்த பின்னரே, நாம் உணவு கொள்ளுதல் வேண்டும்.

சிறுவர்கள் உண்ணும் இடத்துப் பெரியவர்கள் உயர்ந்த பீடத்தில் இருத்தலும், அவர்கள் மனம் நோகும்படி ஏதாவது செய்தலும் ஆகாது. ஒருவர் கண்ணிற்கு மருந்தெழுதிய கோலைத் தூய்மை செய்யாமல், பிறர் கண்ணில் செலுத்துதலும், காலோடு கால் தேய்த்தலும் ஆகாது. புனிதமான பொருள் ஏதேனும் கிடைத்தால் அதனைத் தலையிலும், கண் முதலிய உறுப்புக்களிலும் ஒற்றிக்கொள்ளுதல் வேண்டும்.

ஆசாரக் கோவை என்னும் நூல் உண்ணல், உறங்கல், உடுத்தல், நடத்தல் முதலிய செய்திகளை மட்டும் அன்றி, வேறு சில நுட்பமான செய்திகளையும் கூட நமக்கு அறிவுறுத்துகின்றது. தொல்காப்பியம், இறையனார்களவியல் முதலிய பழந்தமிழ் இலக்கண நூல்களில் குறித்துள்ளபடி, கணவன் மனைவியர் உடன் உறைவு பற்றிய செய்திகளையும் நமக்குக் கூறுகின்றது. மனைவிக்கு மாதப்பூப்பு நிகழ்ந்தால் மூன்று நாள் அளவும் அவளது முகத்தைக் கணவன் காணலாகாது. மூன்று நாளும் கழிந்து தலை முழுகியபின் பன்னிரண்டு நாள் அளவும் மனைவியைக் கணவன் பிரிதலாகாது. உச்சிவேளை, நள்ளிரவு, காலை மாலை, சிவபிரானுக்குரிய திருவாதிரை, திருமாலுக்குரிய திருவோணம், அமாவாசை பௌர்ணமி, அஷ்டமி, பிறந்த நாள் என்பன வற்றில் கணவன் மனைவியர் சேர்தல் ஆகாது.

அளத்தற் கருவியாகிய படியை மணைமேல் வைத்தலும், மணையைக் கவிழ்த்து வைத்தலும், புதிய ஆடையைத் தலைக்கடையில் விரித்தலும், தலைக்கடையில் கட்டிலிட்டுப் படுத்தலும் ஆகா. தம்மை அறியாதார் எதிரில் (வீட்டு வாயிலில்), நிற்றல் நன்றன்று.

திருமணப் பந்தலின் கீழ்த் துடைப்பம், செத்தை, பூவின் புற இதழ், பழையகரிப் பானை, கிழிந்த கட்டில் என்னும் இவைகளைப் பரப்பலாகாது.

## குடும்ப நலம் :

தம்முடைய குடும்பம் செழித்துச் சிறக்க வேண்டும் என்று விரும்பாதவர்கள் எவரும் இலர், அவ்விருப்பம் நிறைவேறவும் ஆசாரக் கோவை நல்ல அறிவுரை வழங்குகின்றது. நாம் அதிகாலையில் துயில் எழுந்திருத்தல் வேண்டும், வீடு அழகாக இருக்கும்படி குப்பை முதலியன வற்றைப் போக்கித் தூய்மை செய்து, பசுஞ் சாணத்தினால் வீட்டை மெழுகி, கோசலத்தை வீடு எங்கும் தெளித்து, பாத்திரங்களைக் கழுவி, நீர் முகந்து நிரப்புதற்குரிய சால்கரகம் முதலிய வற்றைத் துப்புரவு செய்து நீரை முகந்து நிரப்பி, அவற்றிற்கு மலர் அணிந்து, குடும்பம் செழிக்க வேண்டும் என்று இறைவனைத் தியானித்துக்கொண்டு, அடுப்பினுள் நெருப்பிடுதல் வேண்டும். இவ்வாறு செய்தால் குடும்ப நலம் பெருகும். (தொடரும்)

—ஆசிரியர்

# மாலை மாற்றுப் பதிகம்

(உரை விளக்கம்)

[ ந. ரா. முருகவேள், M. A., M. O. L. ]

**முன்னுரை :**

திருஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகங்கள் பலவற்றுள் **'மாலைமாற்றுப் பதிகம்'** என்பதும் ஒன்று. இஃது, ஒரு மாலையின் நுனியை மாற்றிப் பிடிப்பதுபோல, ஒரு பாடலின் முதல் வரியைத் தொடக்கத்திலிருந்து இறுதிவரை படித்து, அதனையே பின்னர் இறுதியில் இருந்து தொடக்கம் வரையில் மாற்றிப் படிக்க, இரண்டாம் வரியாக அமையும் ஒருவகைச் செய்யுள்! இது போல்வனவற்றை 'மிறைக் கவிகள்' என்பர். மிறை—வருத்தம்.

இராபர்ட் பிரவுனிங் என்னும் ஆங்கிலக் கவிஞர், தம்மிடம் வந்து தாம் இயற்றிய கவிதை ஒன்றின் பொருள் குறித்து வினவிய நண்பர் ஒருவர்க்கு, ''ஒரு காலத்தில் அப் பாடலின் பொருளை அறிந்தவர்கள் இருவர் இருந்தனர். ஒருவர் கடவுள்: இன்னொருவர் இராபர்ட் பிரவுனிங். ஆனல் இப்பொழுதோ கடவுள் ஒருவனுக்குத்தான் அப்பாடலின் பொருள் வெளிச்சம்'' ("Once there were two people who knew it; God and Robert Browning; But now God only knows it") என்று மறுமொழி பகர்ந்ததாக அறிஞர்கள் கூறுவர். அதுபோலப் பாடிய கவிஞர்களே கூட, சில சமயங்களில் தாம் பாடிய பாடலின் பொருளை யுணரவும் கூறவும் முடியாமற் போவது உண்டு.

அம்முறையில், பாடுபவரும், வருத்தப்பட்டு முயன்று அரிதிற் பாட, அதற்குப் பொருள் காண்பவரும் வருத்தப்பட்டு, அரிதின் முயற்சி செய்ய வேண்டும்படி அமையும் செய்யுட்களே, மிறைக் கவிகள் எனப்படும். இத்தகைய கடின மான பாடல்களை இயற்றுந் திறம், மிகவும் சிறந்த புலமை வித்தகம் உடையவர்களுக்கே இயலுவதாகும்.

கி. பி. 6—7 ஆம் நூற்றூண்டுகளில் வாழ்ந்திருந்து **காவ்யாதர்சம்** எழுதிய **தண்டியும், கிராதார்ச்சுனீயம்** இயற்றிய பாரவியும், **சிசுபால வதம்** பாடிய மகாகவியும் போன்ற வடமொழிப் புலவர்கள், இன்னோரன்ன சொல்விற்பனம் (Verbal legerdemain) மிக்க பாடல்களை இயற்றுதலில் மிக்க ஆர்வம் காட்டி வந்தனர்.

எனவே, நம்பியாண்டார் நம்பிகள் கூறுமாறுபோல ''ஆறதேறும் சடையான் அருள் மேவ அவனியர்க்கு வீறதேறும் தமிழால் வழி கண்டவர்'' ஆகிய திருஞான சம்பந்தப் பெருமான், தாமும் தாம் வாழ்ந்திருந்த காலத்தின் நிலைமைக்கு ஏற்பக் கி. பி. 6—7ஆம் நூற்றூண்டுகளில், அங்ஙனம் தமிழிற் சிலவகைப் பதிகங்களைப் பாடியருளினர். அவற்றுள் இம் 'மாலைமாற்றுப் பதிகம்' சிறப்புடையதொன்ருகத் திகழ்கின்றது. மிகக் கடினமும் சிக்கலும் வாய்ந்து, பொருள் உணர்தற்கு அரிதாக

இருக்கும் பதிகங்களுள் இதுவும் ஒன்று! இதன் பொருளை ஈண்டு இயன்ற அளவு ஒரு சிறிது சுருங்கக் காண்போம்!

*யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா*
*காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா*

### இதன் பொருள் :

யாம்—சிற்றுயிர்கள் ஆகிய நாங்கள், ஆமா—கடவுள் என்பது பொருந்துமோ? நீ—நீ ஒருவனுமே கடவுள் என்றல், ஆம் ஆம்—பொருந்தும், பொருந்தும்; மா—பெரிய, யாழீ—யாழை ஏந்தியிருப்பவனே! காமா—அனைவராலும் விரும்பப்படுபவனே! காண் நாகா - காணத் தகுந்தவாறு பாம்புகளை அணிந்துள்ளவனே! காணா - காண முடியாதவாறு, காமா - —மன்மதனை (அனங்கனாக)ச் செய்தவனே! காழீயா - சீர்காழிக்குத் தலைவனே! மாமாயா - பெரிய மாயைகளைச் செய்தலில் வல்லவனே! மா - கரிய (கொடிய), மாயா - மாயையினின்றும், நீ - என்னை நீக்கிக் காத்தருள்வாயாக!

### விளக்கக் குறிப்பு :

'பிரமமே உயிர், உயிரே பிரமம்' என்று துணிந்து, யாங்களே கடவுள் என்று தருக்கிக் கூறுவோரும் உளராகலின் **'யாம் ஆமா? நீ ஆம் ஆம்'** என வலியுறுத்திக் கூறியருளினார். ''வேதத்தொலி கொண்டு வீணை கேட்பார் வெண்காடு மேவிய விகிர்தனாரே'' எனவும், ''வருங்கடல் மீளநின்று எம் இறை நல்வீணை வாசிக்குமே'' எனவும் தேவாரப் பாடல்களில் வருதலின், இறைவன் யாழ் அல்லது வீணை ஏந்தியுள்ள திறம் உணரப்படும். 'வீணா தட்சிணாமூர்த்தி' என்னும் திருவுருவம் உள்ளமையும் கருதுக. இனி 'யாளி,' என்னும் சொல் 'யாழி' எனத் திரிந்து, விளிவேற்றுமையில் யாழீ என வர்தது எனினுமாம். 'யாளி போன்றவனே' என்பது அதற்குப் பொருள். காமம்—விருப்பம், காமர்—அழகு. வியத்தகு பல திருவருட் செயல்களைச் செய்தலின் இறைவனை ''மாமாயா'' என்றார். மா—திருமகள், மாயன்—திருமால் எனக் கொண்டு, திருமாலைத் திருவுருவின் ஒரு பகுதியிற் கொண்டுள்ளவனே! எனவும் சிலர் பொருள் கூறுவர். நீ—நீக்கு. *(1)*

*யாகாயாழி காயாகா தாயாரார்ரா தாயாயா*
*யாயாதாரா ராயாதா காயாகாழீ யாகாயா*

யாகா - வேள்விப் பயனாக விளங்குபவனே! யாழீ - யாழ் இசைப்பவனே! காயா - அருளுருவத் திருமேனிகள் எடுப்பவனே! காதா - 'காதுதல்' ஆகிய அழித்தற் றொழிலைச் செய்பவனே! யார் ஆர் - எத்தகையவர்களுக்கும், ஆதாய் ஆயாய் - ஆகின்ற தாய் ஆயினவனே! ஆயா - ஆராய முடியாத, தார் ஆர் ஆயா - ஆத்திப் பூவை மாலையாகக் கொண்டவனே! தாக ஆயா - வேட்கையுற்ற தாருக வனத்து முனி பத்தினியர் ஆகிய கூட்டத்தை யுடையவனே! காழீயா - சீர்காழி இறைவனே! யா - (துன்பங்கள்) எவற்றினின்றும், கா - எம்மைக் காத்தருள்க.

### விளக்கக் குறிப்பு :

யாகம் - வேள்வி, காயம் - உடம்பு, திருமேனி, காதுதல் - கொல்லுதல், ஆர் - ஆத்திப்பூ, தார் - மாலை, தாகம் - வேட்கை, ஆயம் - கூட்டம், 'தாக+ஆயா' என்பது 'தாகாயா' என வந்தது. *(2)*

*தாவாமூவா தாசாகா ழீநாதாநீ யாமாமா*
*மாமாயாநீ தாநாழீ காசாதாவா மூவாதா*

### இதன் பொருள் :

தாவா - அழியாத, மூவா - முதுமை அடையாத, தாசா - தசகாரியங்கள் என்பனவற்றால் அடையும் பொருளாக உள்ளவனே! காழீநாதா - சீர்காழிக்குத் தலைவனே! நீ - அஞ்சி நீங்கத் தகுந்த (சுடுகாட்டில்), யாமா - யாமம் ஆகிய நள்ளிரவில் நடனம் புரிபவனே! மா - பெருமை மிகுந்தவனே! மா மா - மாண்புமிக்க ஐராவணம் என்னும் யானையின் மேல், யாநீ - ஏறிவருபவனே! தாந ஆழி - கொடைத் தன்மையிற் கடல் போன்றவனே! சாகா - சாதலினின்று காத்தருள்க! காசா - பொன் போன்ற ஒளியையுடையவனே! தா - எல்லா வரங்களும் தருக! வா - எங்கள் முன்னே வருக!

மூ - எல்லாவற்றுக்கும் முற்பட்டவனே! வாதா - காற்று முதலாகிய ஐம்பூதங்களின் வடிவாய் விளங்குபவனே!

### விளக்கக் குறிப்பு :

தசம் - பத்து. 'தாசா' என்னும் சொல் அதனின்றும் தோன்றியது. தத்துவரூபம் தத்துவதரிசனம் தத்துவசுத்தி ஆன்மரூபம் ஆன்மதரிசனம் ஆன்மசுத்தி சிவரூபம் சிவ தரிசனம் சிவயோகம் சிவபோகம் என்பன தச காரியங்கள் எனப்படும். இப் பத்துவகைச் செயல்கள் மூலமாக இறைவன் அடையப் படு பவனுதலின் **'தாசா'** என்றார். மாமா - பெருமை யுடைய விலங்கு. அஃது இங்கு ஐராவணம் என்னும் யானையைக் குறித்தது. யாநம் - ஊர்தி, வாகனம். யாநீ - வாகனத்தையுடை யவனே. 'தாநம்+ஆழி' தாநாழி என வந்தது. காசு - பொன்,மணி. வாதம் - காற்று. (3)

நீவாவாயா காயாழீ காவாவானோ வாராமே
மேராவானோ வாவாகா ழீயாகாயா வாவாநீ

### இதன் பொருள் :

நீவா - நீங்குதல் இல்லாத, வாயா - மெய்ப் பொருளானவனே! கா - காவுகின்ற, யாழீ - யாழை யுடையவனே! வான் நோ - கொடி தாகிய பிறவித்துன்பம், வாராமே - எங்களை அடையாமல், காவா - வந்து காப்பாற்றுக! வான் நோவாவா - தேவர்கள் வருந்தாதபடி, மேரா - மேரு மலையை வில்லாக ஏந்தியவனே! காழீயா - சீர்காழி இறைவனே, காயா - ஆகாய வடிவினனே! வாவாநீ - நீ விரைந்து வரு வாயாக!

### விளக்கக் குறிப்பு :

நீவுதல் - நீங்குதல். அதனினின்று **'நீவா'** என்னும் எதிர்மறைப் பெயரெச்சச் சொல் அமைந்தது. வாய்மை - மெய்ம்மை, மெய்ப் பொருள். வாய்மைப் பொருள் ஆகிய இறை வனை ஈண்டு 'வாயா' என விளித்தார், கா - காவுதல், சுமத்தல்; முதனிலைத் தொழிற் பெயர், 'கா யாழ்' என்பது 'சுமக்கப்படுகின்ற யாழ்' எனப் பொருள் தரும். பிறவித் துன்பத் தின் கொடுமை பற்றி **'வான் நோ'** என விதந் தார். வான் - தேவர்கள், ஆகு பெயர். மேரு மலையை வில்லாக ஏந்தித் திரிபுரம் எரித்தமை யினுல் இறைவனை 'மேரா' என்றார். 'காயா' என்பது ஆகாயா என்பதன் முதற் குறை. (4)

யாகாலாமே யாகா ழீ யாமேதாவீ தாயாவீ
வீயாதாவீ தாமேயா ழீகாயாமே லாகாயா

### இதன் பொருள் :

யா - எப்பொருள்களுக்கும், காலா - கால வடிவமாக உள்ளவனே! மேயா - (எல்லாவற்றி லும்) மேவியிருப்பவனே! மேதாவீ - அறிவில் மேம்பாடு மிக்கவனே! தாய் ஆவி (எல்லோருக் கும்) தாயாகவும், உயிராகவும் விளங்குபவனே! வீயாதா - எக்காலத்தும் அழிவு இல்லாதவனே! வீ தாம் மே - கின்னரம் என்னும் பறவைகள் தாமே இசையில் மயங்கி வந்து விழுமாறு, யாழீ - யாழை மீட்பவனே! யாம் - யாங்கள், மேல் - மேற்கொண்டு, ஆகு - ஆவனவற்றிற் காக, ஆயா - ஆராய்ந்து வருந்தாதபடி, கா - காத்தருள்க.

### விளக்கக் குறிப்பு :

'யா' என்னும் வினப் பெயர் ஈண்டு எஞ் சாமைக் குறிப்பின் வந்து, எல்லாப் பொருள் களையும் உணர்த்திற்று. **'காலன்'** ஈண்டு இயமனைக் குறிக்காமல் காலதத்துவத்தை இயக்கி நிற்கும் இறைவனை உணர்த்திற்று. 'மேவியவா' என்பது **'மேவா'** என மருவி வந்தது. 'மேதாவி' என்பது விளிப் பொருளில் நீண்டது. இறைவன் அனைத்துயிர்களுக்கும் தாயாகவும் ஆவியாகவும் விளங்கி வருதலின், **'தாயாவீ'** என்றார். 'வீதாமே யாழீ' என்றது இறைவன் மீட்டியருளும் யாழின் இசையைக் கேட்டு, கின்னரம் அசுணம் முதலிய பறவை கள் தாமே வந்து கூடி, இன்னிசை கேட்டு உருகி மயங்கி மகிழும் திறம் உணர்த்தியவாறு, வீ - பறவைகள், மே - மேவுகின்ற. (5)

மேலே போகா மேதேழீ காவாலேகா லானுயே
யேனுலாகா லேலாகா ழீதேமேகா போலேமே

## இதன் பொருள் :

மேலே - மார்க்கண்டேயரின் மீது, போகாமே - கூற்றுவன் வெகுண்டு செல்லாமல், தேழீ - அதட்டித் தெழித்தருளியவனே! காலாலே - திருவடியினுல், கால் ஆனுயே - காலனுக்கும் காலனுக விளங்கினேயே! ஏல் - ஏற்றுக் கொள்ளத் தகுந்த, நால் - சனகர் சனந்தனர் சநாதனர் சனற்குமாரர் என்னும் நான்கு முனிவர்களுக்கும், ஆகு - ஞானுசிரியனுக எழுந்தருளி, ஆல் - கல்லால மர நிழலில், ஏலா- அவர்களே ஏற்றருளியவனே! காழீதே - சீர்காழியில் விளங்கும் முழுமுதற்றெய்வமே! மேகா - மேகம் போலும் கொடைத்தன்மை யுடையவனே! போலேமே - அடியேங்கள் நின் தொண்டர் திரளில் ஒருவரைப் போல் ஆக மாட்டோமா?

## விளக்கக் குறிப்பு :

தெழித்தல் - அதட்டுதல். தெழீ - தேழீ என வந்தது: விளி வேற்றுமை. ஆகு+ஆல்+ ஏலா - ஆகாலேலா என வந்தது. ஏல்-ஏற்றல்; முதனிலைத் தொழிற் பெயர். ஏலா - ஏற்றருளி யவனே, மேகா - மேகத்தை மழை பொழியு மாறு செய்பவனே எனினுமாம். ''பயிர்விளைக் கும் புயல் அவன் காண்க'' என்பது தேவாரம். போலேமே - போல ஆக மாட்டோமா? ஆகும் படி செய்தருள்க என்பது கருத்து (6).

நீயாமாநீ யேயாமா தாவேழீகா நீதானே
நேதாநீகா ழீவேதா மாயாயேநீ மாயாநீ

## இதன் பொருள் :

நீயா - நீங்குதல் இல்லாத, மாநீ - உமா தேவியை யுடையவனே! ஏயா - ஒப்பு இல்லாத, மாதா - தாயாக விளங்குபவனே! ஏழீ - ஏழு இசையின் வடிவாகத் திகழ்பவனே! கா நீதானே - நீயே எளிவந்து எம்மைக் காப் பாற்றுக! நே - நேயம் மிகுந்த நெஞ்சினேயே, தாநீ - இடமாகக் கொண்டருள்பவனே! காழீ - சீர்காழியில் விளங்கும், வேதா - வேதங்களின் பொருளானவனே! மாய் - எங்களைக் கொல்ல வரும், ஆநீ - துன்பங்களை, மாயாயே நீ - நீ மாய்த்தருள மாட்டாயா?

## விளக்கக் குறிப்பு :

நீ - நீத்தல், நீங்குதல். நீயா - நீங்குதல் இல்லாத. மாநீ - மானி என்பதன் விளி வேற்றுமை, மானம் உடையவள் மானி எனப் படுவள்; கற்பின் மிக்க பெண்கள் அனைவரையும் குறிக்கும் இச்சொல், இங்கு உமாதேவியாரைக் குறித்து வந்தது. ஏய்தல் - பொருந்துதல்; ஒத்திருத்தல். ஏயா - ஒப்பு இல்லாத. ஏழிசை - குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரம் என்பன. நே - நேயம், அன்பு. அஃது ஆகு பெயராய் நெஞ்சத்தைக் குறித்தது. தாநீ - ஸ்தாநத்தை யுடையவன்: ஸ்தானம், தானம் - இடம். ஆநீ - ஹாநி, ஆனி, துன்பம் (7).

நேணவராவிழ யாசைழியே வேகதளேரிய
ளாயுழிகா
காழியுளாயரி ளேதகவே யேழிசையாழவி
ராவணனே

## இதன் பொருள் :

நே - நேயம் மிகுந்து, அணவர் - திரு வடியை நெருங்கி நிற்கும் மெய்யடியார்களின், ஆ - ஆவிகள், விழ - தம் வயமற்றுக் கிடக்க, யா - யாத்துக் கட்டிய, சை - ஆசையாகிய கயிற்றினை, ழியே - அருளால் அவிழ்த்தருள் பவனே! வேக - வேகத்தினையுடைய மானின், அதள் ஏரி - தோலினை அழகுபெற அணிந்தருள் பவனே! அளாய - துன்பங்கள் கலந்த, உழி - இடங்களில், கா - எம்மைக் காத்தருள்க, காழி யுளாய் - சீர்காழிப் பதியில் வீற்றிருப்பவனே! அரு - மன்னிப்பதற்கு அரிய, ஏது - குற்றங்களை, இளவு - எம் சிறுமைத் தன்மையினுல், யாம் செய்து விட்டோம். அஃகவே - (ஆதலின்) அவை நின்னுல் பொறுத்தருளத் தக்கனவே ஆகுக; ஏழிசை - ஏழிசைகளும் பாடுதலில் வல்ல, இராவணனே - இராவணனும் கூடத் தான் செய்த பெரும் பிழைகள் நின்னுற் பொறுக்கப்பட்டனன் அல்லனே?

## விளக்கக் குறிப்பு :

அணவர் - அண்மையில் உள்ளவர்கள்; அடியார்கள், அண்மை - அருகு, சமீபம். ஆ - ஆவி, ஆன்மா; விழ - அவிழ; முதற்குறை.

சை - ஆசை; முதற் குறை. ழியே - அவிழியே, அவிழ்த்தருள் பவனே; முதற்குறை. வேகம் - வேகமாக ஓடும் மானைக் குறித்தது. அதள் - தோல். ஏரி - ஏர் (அழகு) என்னும் சொல்லடி யாகப் பிறந்தது; அழகுபெற அணிந்தருள் பவன் என்னும் பொருளைக் குறித்தது. ஏது - ஏதம், குற்றம்; கடைக்குறை. இளவு - இளமைத் தன்மை, சிறுமை, அற்பத்தனம். அஃகுதல் - நுணுகுதல், சிறியதாதல், பொறுக் கப்படுதல். யாழ - முன்னிலை அசைச் சொல் (8).

காலேமேலே காணீகா ழீகாலேமமாலேபூ
பூமேலேமா லேகாழீ காணீகாலே மேலாகா

## இதன் பொருள் :

காலே மேலே - எல்லாப் பொருள்களுக்கும் முதலும் முடிவுமாக இருப்பவனே! காணீ - அடியார்களுக்குப் பெருஞ்செல்வமாக விளங்கு பவனே! காழி - காழிப் பதியில் உள்ளவனே! மாலே - எல்லோரையும் மயக்கம் செய்பவனே! மேபூ - மேன்மையுடன் பூத்த, பூமேலே - தாமரை மலரின் மேலே வீற்றிருக்கும் பிரமதேவ னும், மாலே - திருமாலும், காலே மேலே - திரு வடியையும் திருமுடியையும், காண் நீ காழி - காண்பதை நீக்கிய உறுதிப்பாடு உடையவனே! கா - எம்மைக் காத்தருள்க.

## விளக்கக் குறிப்பு :

கால் மேல் - முதலும் முடிவும். காணி - நிலம், சொத்து, பெருஞ்செல்வம். மால் - மயக்கம், மயக்கம் செய்பவன். பூ மேல் ஏ (ய்) - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன். காழ் - மரத்தி லுள்ள வயிரம், உறுதிப்பாடு. நீ - நீத்தல், நீக்குதல். ''பூமேல் ஏ (ய்) - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், மாலே - திருமாலும் ஆக விளங்குபவனே! காழி - அடியார்களைக் காத்தலில் உறுதிப்பாடு மிக்கவனே! காண் - எம்மைக் கடைக்கணித்தருள்; கண்டுகொள். ஈ காலே - நின் திருவடிகளை எமக்குத் தந் தருள்க. மேலேகா - மேற்கொண்டும் (மேற் பிறவிகளிலும்) எம்மைக் காப்பாற்றுக!'' எனவும் ஒருவாறு பொருள் கொள்ளலாம் (9).

வேரியுமேணவ காழியொயே யேனைநிணேமட
ளோகரதே
தேரகளோடம ணேநினைபே யேயொழிகாவண
மேயுரிவே

## இதன் பொருள் :

வேரியும் - வாசனையும், ஏண் - பெருமையும், நவம் - புதுமையும் கொண்ட, காழியொயே - சீர்காழிப் பதியில் உள்ளவனே, ஏனை - பிறி தாகிய வெறுப்பையும், நீள்நேம் - நீண்ட நேயத்தையும், அடு - அடுதலும், அள் - அள்ளு தலும், ஓகரது ஏ - யோகிகளினுடைய செயலே யாகும். தேரகளோடு - புத்தர்களின் சொற் களையும், அமணே - சமணர்களின் சொற்களை யும், நினை - நினைத்தலையும், ஏய் - அவர்களுடன் கூடுதலையும், ஒழி - ஒழியும்படி செய்து, காவணம் (ஏ) - அந்நெறிகளில் யாம் சேராமல் எம்மைக் காக்கும் தன்மைகள், உரிவே - உமக்கு உரியனவேயாகும்.

## விளக்கக் குறிப்பு :

காழியோயே என்பது 'காழியொயே' என வந்தது. ஏனை - ஏனையது, மற்றையது, பிறிது. அஃது ஈண்டு வெறுப்பைச் சுட்டி வந்தது. நேம் - நேயம், இடைக்குறை; வெறுப்பை நீக்குதலும், நேயத்தைப் பெருக்குதலும் யோகி களின் செயல்கள் என்பது கருத்து. யோகர் என்பது ஓகர் என மருவி வந்தது: 'யோக்கிய சத்தி' என்னும் தொடர் 'ஒக்கிய சத்தி' எனச் சிவஞான சித்தி (சுபக்கம் 138) யின்கண் வந்தாற்போல.

தேரர்கள் என்பது தேர்கள் என நின்றது. அடு—அள்—நினை—ஏய் என்னும் முதனிலைகள், அடுதல் அள்ளுதல் நினைத்தல் ஏய்தல் என்னும் தொழிற் பெயர்ப் பொருளில் வந்தன. கா + வண்ணம் - காக்குந் தன்மை; இடைக்குறை. (பந்தலைக் குறிக்கும் காவணம் என்பது பிறி தொரு சொல்). உரியவே என்பது 'உரிவே' என மருவிற்று. (10)

நேரகழாமித யாசழிதா யேனனியேனனி
ளாயுழிகா
காழியுளானின யேனினயே தாழிசயாதமி
ழாகரனே

## இதன் பொருள் :

நேர் - நேர்மைக் குணத்தினே, அகழ் ஆம் - அகழ்ந்து கல்லி எறிவது ஆகிய, இதய ஆசு - மனத்திண்கன் எழும் காம வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங்களையும், அழி - அழிக்க வல்லவனே, (அழித்தருள்க எனினுமாம்). தாய் ஏல் - உலகுக்கெல்லாம் தாயாகும் தன்மையை ஏற்கத் தக்கவன், நல் நீயே - நல்லவன் ஆகிய நீ ஒருவனேயாம்! நல் - நன்மை புரிவதில், நீள் - உயர்வு மிக்கவனே, ஆய் உழிகா - தளர்ச்சி நேரும் இடத்து எம்மைக் காத்தருள்க. காழியுளானின் - சீர்காழிப் பதியிலுள்ள சிவபிரானைப் பற்றிய, நையே - மன உருக்கத்தைத் தரும் இப்பாடல்களை, நினையே - நினைத்துப் பாடவே, தாழ் இசையா - ஒரு குறைவு உண்டாகாது. தமிழ் ஆகரனே - தமிழ்க்கு உறைவிடம் போன்ற திருஞான சம்பந்தன் உறுதி கூறுவது இது!

## விளக்கக் குறிப்பு :

இதய+ஆசு+அழி - இதயாசழி என வந்தது. தாய்+ஏல்+நல்+நீயே - தாயேன னியே என அமைந்தது. நீயே! என்பது நியே எனக் குறுகிற்று, நல்+நீள் - 'னனிள்' எனப் புணர்ந்து குறுகியது. ஆய்தல் - தளர்தல், துன்புறுதல். உழி - இடம், சமயம். ஆய்+ உழி+கா - தளர்ந்த இடத்துக் காப்பாற்றுக. நைவு - மன உருக்கம்; பாடல்களுக்குப் பெயரா யிற்று. 'காழியுளானின்+நையே+நினையே' என்பது, 'காழியுளானினயேனினயே' எனப் புணர்ந்து நின்றது. தாழ்வு+இசையா - தாழிசயா என அமைந்தது. ஆகரம் - உறை விடம், நிலைக்களம். தமிழாகரன் :- திருஞான சம்பந்தர் தம்மைக் குறிப்பிட்டுக் கொண்டபடி. இத் திருப்பதிகம் ஓதுபவர்க்கு உண்டாகும் பயன் கூறியவாறு. இவ்விறுதிப்பாடலைத் 'திருக் கடைக்காப்பு' என்பர். *(11)*

—ஆசிரியர்.

# கம்பர் கண்ட அயோத்தி

**மகாவித்துவான் திரு. கு. மதுரை முதலியார்,**
( முன்னாள் தமிழ்ப் பேராசிரியர், சென்னை லயோலா கல்லூரி )

கம்ப நாட்டாழ்வார், அயோத்திமா நகரத்தின் சிறப்பை ஏழு இன்கவிகளால் எடுத்து இயம்பியுள்ளார். அவற்றுள் முதற் கவியிலே தமிழின் தனிச்சிறப்பை நன்கு விளக்கி, அத்தகைய தமிழிற் பெரும் புலமை யுடைய தமிழ்ப் புலவர்களாலும், வடநூல் முனிவராலும் புகழ் பெற்றுள்ளது அயோத்தி என்றார். தமிழ்ச் சொற்களின் சிறப்பையும் அச்சொற் செல்வமுடைய புலவர்களையும். ''செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூரிய தீஞ் சொல் வவ்விய கவிஞர்'' என அப்பெரும்புலவர் போற்றிப் புகழ்ந்துள் ளமை பெரிதும் பாராட்டற்குரியது. எல்லா வுலகத்து மக்களும் தவஞ்செய்து மேலேற விரும்புகின்ற அப் பரமபதத்தினுள்ளோர் அனை வரும் அங்குநின்றும் இறங்கி இவ்வயோத்திக்கு வர விரும்புகின்றனர் என்றால், அதற்குக் காரணம் இராமபிரானது திருவவதாரமே யென்பது நன்கு விளங்குகின்றது. அப்பரந் தாமனது சௌசீலிய சௌலப்பிய குணங் களில் ஈடுபட்டு மகிழ்வதற்காகவே, வைகுந்தத் திலுள்ளவர்களும் அயோத்திக்கு வரத் துடிக் கின்றனர்.

'மாண்டு பிறக்குந் துயர்போய் வைகுந்தம் புக்கவரும் மீண்டு தொழக் காதலிக்கும் வேங் கடம்' என்பது பிள்ளைப் பெருமாள் ஐயங் காரின் திருமொழி. இத்தகைய சிறப்புப் பொருள் பொதிந்த கம்பரது செய்யுளைப் பன்முறை ஓதியோதி உவகைக் கடலில் ஆழ் வோம்.

செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற்
சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞர் அனைவரும் வடநூல்
முனிவரும் புகழ்ந்தது: வரம்பில்
எவ்வுலகத்தோர் யாவரும் தவஞ்செய்(து),
ஏறுவான் ஆதரிக் கின்ற
அவ்வுல கத்தோர் இழிவதற்(கு) அருத்தி
புரிகின்ற(து), அயோத்திமா நகரம்.

கம்பநாடர் ஆறு பாடல்களால் அயோத்தி யின் மதிலைப் புகழ்ந்த பின்னர், 'அம்மதிலைச் சூழ்ந்துள்ள அகழியைப் பற்றிச் சொல்வோம்' எனத் தொடங்கும் ஒரு பாடலில், பொன்விலை மகளிரின் மன ஆழத்தையும், புன்கவியின் தெளிவின்மையையும், நன்னெறிவிலக்கும் பொறிகளைப் போல் பாயும் முதலைகளையும் அமைத்து, அழகுறப் பாடியுள்ளது அறிஞர்க்கு அகமகிழ்ச்சியை அளிக்கும் தன்மையது.

அந்நகரத்துக் கோபுர வாயில்களில் அமைந்துள்ள பல சித்திரங்களில் ஒன்றன் சிறப்பைக் கல்வியிற் பெரியார், நமக்குக் காட்டுகின்றார். அதனால் முற்காலத்தில் சித் திரத்தில் கைதேர்ந்த மக்கள் பலர் விளங்கினர் என்பதை யறியலாம்.

தனது புணர்ச்சி விருப்பம் தோன்றுமாறு பெண் புறு அழைக்கவும், தன்உயிரை யொத்த ஆண்புறு அன்போடுவந்து தன்னைத் தழு வாமல், அவ்வாயிலின் புறத்தே சித்திரத்தில் அமைந்துள்ள பெண் புறுவினருகிலே அதனைத்

தன் பேடை யென்று மயங்கி யிருக்க, அது கண்டு, தன் சேவல் வேறு பேடையிடம் காதல் கொண்டுள்ளது என்று, சிறிது கோபம் கொண்ட பெண் புரு குற்றமில்லாத பொன் மயமான தேவலோகத்திலே, முற்பிறப்பிலே நற்றவஞ் செய்துள்ள நல்லோர் வசிக்கும் கற்பகச் சோலையில்போய் மறைந்துவிடும்'.

எனக் கம்பர் படைத்துள்ள செய்யுட் படைப்பால், அயோத்தியில் கோபுர வாயிலில் அமைந்துள்ள சித்திரங்கள் இயற்கைப் பொருள்களைப் போல் காட்சியளிக்கின்றன என்பதும், கோபுர வாயில்கள் மிக வோங்கி யுள்ளன என்றும் தொனிக்கும் இவ்வழகிய பாடலைப் பாடி மகிழலாம்.

''தாவில்பொற் புலத்தின்நல் தவத்தினேர்கள்
[தங்குதாள்
பூவுயிர்த்த கற்பகப் பொதும்பர்புக்
[கொதுங்குமால்;
ஆவியொத்த சேவல்கூவ அன்பின்வந்
[தணைந்திடாது
ஓவியப் புருவின்மாடிருக்கவூடு
பெடையே''

அயோத்தியிலுள்ள பெண்களின் பேரழகை அழகொழுக எடுத்துக்காட்டும் கம்பரது பாடலின் அழகில் ஆழ்ந்து மகிழ் வோம் :

'பொன் மணிகளின் ஒளிமிகுதியால் இது பகல், இது இரவு என்று பொழுதின் விகற்பம் அறிய முடியாத அந்த நகரத்தில் உள்ள மாதரது வடிவத்தைப் பார்க்கும் விருப்பத் தினலோ, அவர் வாழும் மாளிகையில் எழுதப் பெற்றுள்ள சித்திரங்களும் இமையாதவை களாக இருக்கின்றன' என்பது கீழ்வரும் பாடலின் பொருள் :

'' பொழுதுணர் வரியவப் பொருவில்
[மாநகரத்
தொழுதகை மடந்தையர் சுடர்வி
[ளக்கெனப்
பழுதறு மேனியைப் பார்க்கும் ஆசைகொல்,
எழுதுசித் திரங்களும் இமைப்பில வாதலே''

'இயல்பாக இமையாத சித்திரங்களை, மாதரழகைப் பார்க்க விரும்பியோ இமை யாதனவாயிருக்கின்றன என்று, அவரழகை அவாவி நோக்கும் ஆடவர்கள் இமையாத் தன்மையைச் சித்திரங்களின் மேல் ஏற்றிக் கூறியது தற்குறிப்பேற்ற அணி; என்பர் உயர்திரு. வெ. ப. சுப்பிரமணிய முதலியார்.

சிந்தாமணியாரும் இலக்கணையார் இலம் பகத்தில், சீவகன் இலக்கணையின் அழகை நோக்கி மகிழ்ந்து தன் கண் இமையாணுய்க் காத லித்திருந்த நிலையைக் கீழ்வரும் பாடலில் காட்டியுள்ளார் !

'மாதர்தன் வனப்பு நோக்கி
மகிழ்ந்துகண் இமைத்தல் செல்லான்
காதலித் திருப்பக் கண்கள்
கசிந்துநீர் வரக்கண் டம்ம
பேதைமை பிறரை யுள்ளி
அழுபவர்ச் சேர்தல் என்றுன்
வேதனை பெருகி வேற்கண்
தீயுமிழ்ந் திட்ட அன்றே.

அயோத்தியில் கலைமகளும் திருமகளும் களிநடம்புரியும் காட்சியைக் கீழ்வரும் பாடலில் காணலாம்.

'மன்னவர் தருதிறை அளக்கு மண்டபம்
அன்னமென் னடையவர் ஆடு மண்டபம்
உன்னரும் அருமறை ஓது மண்டபம்,
பன்னரும் கலைதெரி பட்டி மண்டபம்.'

அயோத்தியில் பல மண்டபங்கள் காட்சி யளிக்கின்றன. பல்வேறு நாடுகளிலிருந்து அரசர்கள் கொண்டுவந்து கொடுக்கின்ற பொருள்களை யளக்கும் மண்டபங்களையும், அன் னம்போல் அழகாக நடக்கும் மகளிர் ஆடல் புரியும் மண்டபங்களையும், ஞாபகத்தில் வைத் துக் கொள்வதற்கு அருமையாகி, ஓதவும் அருமையாகவுள்ள வேதங்களை யோதும் மண் டபங்களையும், ஆராய்ச்சி செய்வதற்கும் அரு மையாகவுள்ள கலைகளை நுண்ணறிவால் ஆழ்ந் தாழ்ந்து ஆராயும் பட்டி மண்டபங்களையும் அங்குக் காணலாம்.

'கள்வாரிலாமையால் பொருட் காவலும் இல்லை. கொள்வாரிலாமையால் கொடுப்பார் களும் இல்லை' என்று கூறியவர், 'கல்விமுற்ற வல்லாரும் இல்லை; அவை வல்லரல்லாரும்

இல்லை—காரணம், 'கல்லாது நிற்பார் பிறர் இன்மையால்' என்கின்றார். இல்லாருமில்லை உடையார்களும் இல்லை—காரணம், எல்லோரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலால் என்கின்றார்.

இவ்வண்ணம் பலபல நுண்ணிய பொருள்களைக் கூறிக் கொண்டு வந்தவர், இறுதியில் அயோத்தியில் உள்ள ஓர் அழகிய மரத்தைக் காட்டி மக்களை மகிழ்விக்கின்றார்.

'அயோத்தி மாநகரத்தில் கல்வியாகிய ஒரு வித்தானது முளைத்து வளர்ந்து, கேள்வியாகிய கிளை கிளைத்து, தவமாகிய தழை தழைத்து, அன்பாகிய அரும்பு அரும்பி, தருமமாகிய மலர் மலர்ந்து, போகமாகிய பழம் பழுத்தது என்று கூறும்படி, அந்நகர மாந்தர் கல்வி கேள்வி தவம் அன்பு தருமம் போகம் ஆகியவைகளைச் சிறப்பாகப் பெற்றுள்ளனர் என்பது கீழ்வரும் கம்பரது பாட்டின் பொருள்.

''தவம் முதல் போகம் ஈறாகவுள்ள நான்கும், கல்வியின் காரியமாய் முறையே ஒன்றற்கொன்று காரணமாதலால் இங்ஙனம் கூறினார்'' என்பர் வை. மு. கோ.

கம்பரால் கல்வியானது, மரமாக உருவகம் செய்யப்பெற்றுள்ளது. மரம் மக்களின் இன்பத்திற்காகவே தோன்றியுளது. 'சிற்றுயிர்க்கு உற்ற துணையாகிய கல்வி, அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும்' என்பர். ஆகையால் கீழ்வரும் பாட்டில் கல்வியை முதற்கண்ணும், போகக்கனியை இறுதியிலும் வைக்கப் பெற்றிருப்பது ஆழ்ந்து சிந்தித்தற்குரியது. கல்வியென்னும் மரம் வன்மையுற விரும்புவோர், கேள்விச் செல்வத்தைப் பெற முயல வேண்டும். 'எனைத்தானும் நல்லவையே கேட்க அனைத்தானும் ஆன்ற பெருமைதரும்' என்பது திருக்குறள். கல்வி கேள்விகளால் சிறந்து விளங்கினும் ஒழுக்கம் இன்றேல் உயர்வில்லை. ஆகையால், 'பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித் தேரினும் அஃதே துணை' என்றார் திருவள்ளுவர்.

கீழ்வரும் பாட்டில் தவம் என்பது ஒழுக்கத்தைக் குறிக்கும். ஒருவன் கல்வி கேள்விகளாற் சிறந்து ஒழுக்கத்தால் உயர்ந்திருப்பினும், அவனது உள்ளத்தில் அன்பென்னும் அரும்பொருள் இல்லையேல், அவனை 'என்பு தோல் போர்த்த வுடம்பு' என்றார் தெய்வப்புலவர். ஆகையால், கல்வி கேள்வி ஒழுக்கம் அன்பு என்பவைகளைப் பெற்று, அறச் செயல்களை உடையவர்களே போகக் கனியை நுகரும் பெருமக்கள் என்பதைக் கீழ்வரும் பாட்டால் அறிந்து மகிழலாம்.

'ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந்து
    எண்ணில் கேள்வி
ஆகம் முதல்திண் பணைநோக்கி
    அருந்த வத்தின்
சாகம் தழைத்(து), அன்புஅரும்பித்
    தருமம் மலர்ந்து
போகங் கனியொன்று, பழுத்தது
    போலும் அன்றே'

என்பது கம்பராமாயணத்தின்கண் வரும் கவின்மிகு பாடல்களுள் ஒன்று. இதன்கண் அமைந்துள்ள உருவக அணியின் பொருத்தமும் சிறப்பும் அறிந்து சுவைத்து மகிழற்பாலன.

# ஸ்ரீவைஷ்ணவச் செல்வங்கள்

[ மகாவித்வான் ஸ்ரீமத் பி ப. அண்ணங்கராசாரிய சுவாமிகள், காஞ்சிபுரம் ]

நம்முடைய பூருவாசாரியர்களில் மண வாள மாமுனிகளீறாகவுள்ள பரிகணிதர்களான ஆசாரியர்கள் பதினெண்மர்தாம் க்ரந்தங்களை யருளிச்செய்து உபகாரம் செய்தருளினவர்கள் என்று விவரித்து நிரூபிக்கப்படுகிறது. இது வொரு விலக்ஷணமான விருந்து.

1. ஆளவந்தார்; முதன்மையான ஆசாரி யர் ஸ்ரீமந்நாதமுனிகளானாலும், அவர் தாமும் நியாய தத்வமென்கிற க்ரந்தமருளிச் செய்த தாகப் பிரஸித்தியிருந்தாலும், அந்த திவ்ய க்ரந்தம் லுப்தமாயிற்றென்று தெரிவதனால் ஆளவந்தாரையே முந்துற முன்னம் கொள்ளு கின்றேன். இவரருளிச்செய்த க்ரந்தங்களுள் ஒன்றிரண்டு லுப்தங்களெனப்படுகிறது. இப் போது பிரசாரத்திலுள்ள க்ரந்தங்களாவன— ஸ்தோத்ர ரத்னம், சதுச்ச்லோகீ, ஸித்தித்ர யம், ஆகமப்ராமாண்யம், கீதார்த்த ஸங்க்ர ஹம் என்னுமிவையே; கத்யத்ரயம்போல் ஸித்தித்ரயம் மூன்று க்ரந்தங்கள்.

2. எம்பெருமானார்: சுவாமியருளிச் செய்த க்ரந்தங்களில் ஒன்றுகூட லுப்தமான தாகத் தெரியவில்லை. 'நவரத்னம்' அல்லது 'நவநிதி' என்னும்படியாக ஸ்வாமி ஸாதித் தருளின க்ரந்தங்கள் ஒன்பது. கீதாபாஷ்யம், ஸ்ரீபாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தஸாரம் வேதார்த்த ஸங்க்ரஹம், சரணாகதிகத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம், நித்யம்- என்னுமிவை ஒன்பது க்ரந்த ரத்னங்களாம், வேதாந்த தீப வேதாந்த ஸாரங்களுக்குத் தவிர மற்ற ஏழு க்ரந்தங்களுக்கும், வியாக்கி யானங்கள் அவதரித்துள்ளன. வேதாந்த வாசிரியரருளிச் செய்த ஸ்ரீபாஞ்சராத்ரரக்ஷை யில் மூன்றாமதிகாரத்திற்கு நித்யவ்யாக்யா நாதிகாரமென்று பெயரிட்டிருப்பதால் நித்யத் திற்கும் வியாக்கியான முள்ளதாகக் கொள்க.

3, திருக்குருகைப்பிரான்பிள்ளான்: ''தெள் ளாரும் ஞானத் திருக்குருகைப் பிரான் பிள் ளான், எதிராசர் பேரருளால்—உள்ளாருமன் புடனே மாறன்மறைப் பொருளை அன்றுரைத் தது, இன்பமிகுமாறாயிரம்'' என்கிற உபதேச ரத்தினமாலைப் பாசுரப்படியே எம்பெருமானார் திருவாணையின்படி திருவாய்மொழிக்கு முதன் முதலாக ஆறாயிரப்படியென்கிற ஸங்க்ரஹ வியாக்கியான மிட்டருளினவர் திருக்குருகைப் பிரான் பிள்ளான். ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிர தாயத்தில் முதன்முதலாகத் திருவவதரித்த மணிப்ரவாள க்ரந்தம் [அதாவது ஸம்ஸ்க்ரு தத்ராவிட மிச்ரமான க்ரந்தம்] இதுவே யாகும்.

4. கூரத்தாழ்வான்: ஸ்ரீவைகுண்ட ஸ்த வம், அதிமாநுஷஸ்தவம், ஸுந்தர பாஹு ஸ்தவம், வரதராஜ ஸ்தவம், ஸ்ரீஸ்தவம் என்னுமிந்த பஞ்சஸ்தவங்கள் ஆழ்வானருளிச் செய்தவை. வியாக்கியானத்தோடு கூடிய யமகரத்நாகரம் ஆழ்வானருளிச் செய்ததாகச் சொல்லப்படுவது விவாத க்ரஸ்தம். கூரேச விஜயம் பின்புள்ளார் பணித்ததென்று அதி லேயே வ்யக்தமாகிறது. சரமச்லோக வியாக் கியானமும் நித்யமுமருளிச்செய்திருந்ததாக தேசிகர் உதாஹரிக்கிறார்; அவை லுப்தங்கள்.

கூரத்தாழ்வான் திருவடியான கூரநாராயண ஜீயர் **ஸுதர்சந சதகம்** பணித்தார். ஆனால் இவர் ஆசார்ய பரம்பரையில் சேர்ந்தவரல்லர். மந்த்ர சாஸ்த்ரத்தில் மஹாநிபுணர்.

5. **பட்டர்**: [ஸ்ரீ பராசரபட்டார்யரென்பது இவரையே] இவரருளிச்செய்த க்ரந்தங்கள்—ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவம், ஸ்ரீ குணரத்ந கோசம், ஸ்ரீ ரங்கநாதஸ்தோத்ரம் [''சப்தப்ராகாரமத்யே'' இத்யாதி] அஷ்டச்லோகீ. **பகவத் குணதர்ப்பணமென்று** மறுபெயருடைய ஸஹஸ்ரநாமபாஷ்யம், க்ரியாதீபமென்கிற நித்யக்ரந்தம், கைசிக புராண வியாக்கியானம். நம்பெருமாள் திருமஞ்சனச்லோக ரத்னங்கள். லக்ஷ்மி கல்யாண நாடகமும் தத்வரத்நாகரமும் லுப்தங்கள். பட்டருடைய திருத்தம்பியாரான சீராமப்பிள்ளையின் திருக்குமாரரான வேதாசார்யர் **க்ஷமா ஷோடசி** பணித்தார்.

6. **நஞ்சீயர்**: பட்டர் திருவடிகளிலே ஆச்ரயித்த நஞ்சீயரருளிச்செய்த க்ரந்தங்களாவன—திருவாய்மொழிக்கு வியாக்கியானமான ஒன்பதினாயிரப்படி. திருப்பாவை வியாக்கியானம், கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக்கியானம்.

7. **எங்களாழ்வான்**: ஸ்ரீ விஷ்ணு சித்தார்ய ரென்கிற எங்களாழ்வான் மஹாஜ்ஞாநாதிகராய் விளங்கினவர், ஸ்ரீ பாஷ்யத்தில் அப்ரதிம பாண்டித்யம் பெற்றவர். ஸ்ரீவிஷ்ணு சித்தீயமென்கிற ஸ்ரீ விஷ்ணு புராண வியாக்கியானம் ஒன்றுதான் அருளிச்செய்ததாகத் தெரியவருகிறது.

8. **நடாதூரம்மாள்**; வாத்ஸ்ய வரதாசார்ய ரென்னுமிவர் எங்களாழ்வான் திருவடிகளிலாச்ரயித்து மஹாஜ்ஞாதாவாயிருந்தவர். அருளிச்செய்தவை—**தத்வஸார** மென்கிற ஸ்ரீபாஷ்யார்த்த ஸாரஸங்க்ரஹ ரூபமான க்ரந்தம், ப்ராதரநுஸந்தேய ச்லோகமாலா, பரத்வாதிபஞ்சகம்,

9. **நம்பிள்ளை**: இவரருளிச் செய்தவை—திருவாய்மொழி வியாக்கியானமான ஈடு முப்பத்தாறாயிரப்படி. திருவிருத்த வியாக்கியானமான ஈடு. இவற்றை வடக்குத் திருவீதிப் பிள்ளையின் க்ருதிகளாகவுங் கொள்ளலாம்: நம்பிள்ளை கங்கா ப்ரவாஹமாக அருளிச் செய்தவைகளை ஏடுபடுத்தினவர் வடக்குத் திருவீதிப் பிள்ளை. ஆகவே இவற்றை இருவருடையவும் க்ருதியாகக் கொள்ளத் தட்டில்லை.

10. **வடக்குத் திருவீதிப் பிள்ளை**: இவர் திவ்யப்ரபந்த வியாக்கியானமாக அல்லாமல் வேறு சில க்ரந்தங்களுமருளிச் செய்திருப்பதாகக் காண்கிறது. குன்றத்தூரய்யன் திருக்குமாரரான அப்பன் ஸ்ரீநிவாஸாசார்யர் பணித்ததாக (1913-ஆம் வருஷத்தில்) தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டுள்ள அஷ்டச்லோகீ பெரியபடி வியாக்கியானத்தில் (பக்கம் 14லும் 66லும்) வடக்குத் திருவீதிப்பிள்ளை அஷ்டாக்ஷர தீபிகை யென்றொருக்ரந்த மருளிச் செய்திருப்பதாக உதாஹரிக்கப்பட்டுள்ளது.



11. **பெரியவாச்சான் பிள்ளை**: இவரருளிச் செய்த க்ரந்தங்கள்-நாலாயிரத் திவ்யப்ரபந்த வியாக்கியானங்கள். அதிலும் பெரியாழ்வார் திருமொழியின் வியாக்கியானம் நானூறு பாசுரங்களுக்கு லுப்தம். ஸ்தோத்ர ரத்ன வியாக்கியானம். ஜிதந்தா வியாக்கியானம். நிகமனப்படியென்கிற மிகச் சிறியதொரு ரஹஸ்ய க்ரந்தம். ஸ்ரீராமாயணநுதி தனிச்லோகம்.

13. **பிள்ளை லோகாசாரியர்**: இவரருளிச் செய்த க்ரந்தங்கள். **அஷ்டாதச ரஹஸ்யம்.** அவையாவன—ஸ்ரீவசநபூஷணம், தத்வத்ரயம், அர்த்தபஞ்சகம், அர்ச்சிராதி. ப்ரமேய சேகரம். ப்ரபந்நபரித்ராணம். ஸாரஸங்க்ரஹம். ஸம்ஸாரஸாம்ராஜ்யம். நவரத்னமாலை. நவவிதஸம்பந்தம். யாத்ருச்சிகப்படி. பரந்தபடி, ச்ரிய:பதிப்படி. தத்வசேகரம். தனிப்ரணவம், தனித்வயம், தனிச்சரமம், முமுக்ஷுப்படி. இந்த ரஹஸ்ய க்ரந்தங்கள் தவிர வேறு சில க்ரந்தங்களும் இவரருளிச் செய்திருந்ததாகத் தெரியவருகிறது. கத்யத்ரயத்திற்கு ஒரு வியாக்கியான மருளிச்செய்திருந்ததாக மணவாள மாமுனிகளெடுத்துக் காட்டியருளுகிறார் ,—தத்வத்ரயத்தில் ஈச்வர ப்ரகரணத்தில் (6) ''ஜ்ஞாநா நந்தைக ஸ்வரூபனுகையாவது ஆநந்த ரூபஜ்ஞாநனுயிருக்கை'' என்ற விடத்து மாமுனிகளின் வியாக்கியானத்

தில் ''அநுகூலஜ்ஞானமே ஸ்வரூபமாயிருக்க ஜ்ஞாநானந்தங்களென்று பிரித்துச் சொல்லு கிறது இரண்டு முண்டாகைக்காக என்றே இவர் தாமிட்டருளின கத்ய வ்யாக்யானத் திலே அருளிச்செய்தது'' என்கிற ஸூக்தி காண் கிறது. அந்த வியாக்கியானம் லுப்தம்.

13. **அழகிய மணவாளப் பெருமாள் நாய ஞர்:** இவர் வடக்குத் திருவீதிப்பிள்ளையின் இளைய திருக்குமாரர், பிள்ளைலோகாசார் யருடைய திருத்தம்பியார். இவரருளிச் செய்த க்ரந்தங்கள்—ஆசார்ய ஹ்ருதயம். அருளிச் செயல் ரஹஸ்யம், திருப்பாவைக்கு ஆறுயிரப் படி வியாக்கியானம். கண்ணிநுண் சிறுத் தாம்பு வியாக்கியானம், அமலனுதிபிரான் வியாக்கியானம். (பெரிய திருமடல் வியாக்கி யானம்). ஆசார்ய ஹ்ருதயத்திற்கு மூலமான பட்டோலை. (இது லுப்தம்.)

14. **ஸ்ரீஸுதர்சந பட்டர்:** ச்ருதப்ரகாசி காசார்ய ரென்பது இவரையே. இவர் நடா தூரம்மாள் திருவடிகளிலே யாச்ரயித்து தீபா துத்பந்ந ப்ரதிபம் போலே மிக விளங்கினவர். இவரருளிச் செய்த க்ரந்தங்கள்—ஸ்ரீபாஷ்யத் திற்கு விபுல வியாக்கியானமான ச்ருதப்ரகாசி கையும், அதிஸம்க்ஷிப்த வியாக்கியானமான ச்ருதப்ரதிபிகையும், வேதார்த்த ஸங்க்ரஹ வ்யாக்யானமான தாத்பர்ய திபிகையும். சரணுகதி கத்ய வ்யாக்யானமும், ஸுபாலோப நிஷத்பாஷ்யமும்.

15. **ஸ்ரீமந்நிகமாந்த மகாதேசிகன்:** ஸ்ரீவைஷ் ணவ ஸம்பிரதாயத்தில் அதிக ஸங்க்யையான க்ரந்தங்கள் அருளிச் செய்தவர் இவ்வாசிரியர். அந்த க்ரந்தங்கள் ஸ்தோத்ராவளீ விபாகம், காவ்ய நாடக விபாகம், வேதாந்த விபாகம், வ்யாக்யான விபாகம், ஸம்ப்ரதாய விபாகம் என்று ஐந்துதொகுதிகளாகஅடியேனல் வகுத்து அச்சிடப்பட்டுள்ளது, உலகமெல்லாம் பரவி யுள்ளது. ஐந்தாவது தொகுதியைப் பற்றின அடியேனுடைய ஆராய்ச்சி நூல்கள் பல காண்க.

16. **ஆச்சான் பிள்ளை:** இவர் பெரியவாச் சான் பிள்ளையின் திருக்குமாரரும் திருவடியு மாவர். இவர் பரந்த ரஹஸ்யம், மாணிக்க மாலை, சதுச்ச்லோகீ வியாக்கியானம், தத்வ ஸங்க்ரஹம் முதலான க்ரந்தங்களை யருளிச் செய்தவர்.

17. **வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர்:** இவர் ஆச்சான் பிள்ளை திருவடிகள். இவரரு ளிய க்ரந்தங்கள்—திருவாய்மொழிக்குப் பன்னீ ராயிரப்படியுரை. திருவிருத்தத்திற்கு ஸ்வாப தேசவுரை, திருப்பாவைக்கொரு ஸங்க்ரஹ வியாக்கியானம். தத்வதீபம், தீபப்ரகாசம், தத்வ நிருபணம், ரஹஸ்யத்ரய காரிகாவளீ, தீப ஸங்க்ரஹம்.

18. **மணவாள மாமுனிகள்:** ஸ்வாமி எம் பெருமானுரான பூர்வாவதாரத்திலருளிச் செய் தவை ஒன்பது திவ்ய க்ரந்தங்கள்; அவற்றுக் கிரட்டிப்பாகப் பதினெட்டு க்ரந்தங்கள் இவ் வவதாரத்திலருளிச் செய்தவை. 1. முமுக்ஷுப் படி வியாக்கியானம், 2. தத்வத்ரய வியாக்கி யானம். 3. ஸ்ரீவசநபூஷண வியாக்கியானம், 4. ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானம், 5. பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம் [நானூறு பாசுரங்களுக்கு] 7. இராமாநுச நூற்றந்தாதியுரை. 7. உபதேச ரத்தினமாலை 8. திருவாய்மொழி நூற்றந்தாதி, 9. ஆர்த் திப் பிரபந்தம் 10. ஞானஸார ப்ரமாண யோஜனை. 11. ப்ரமேய ஸாரப்ரமாண யோஜனை. 12. யதிராஜவிம்சதி, 13. தேவ ராஜ மங்களம். 14. கீதாதாத்பர்ய தீபம் (லுப்தம்). 15. திருவாராதன ப்ரயோகம். 16. ஈட்டு ப்ரமாணஸங்க்ரஹம். (இப்போது அச்சிடப்பட்டிருப்பதல்ல.) 17. ரஹஸ்ய ப்ரமாண ஸங்க்ரஹம். 18. திவ்யதேசமங்களா சாஸன மாலிகை.

இப்பதினெண்மர் நம் பூருவாசார்யர்கள் அருளிச் செய்துள்ள நூல்கள் அனைத்தும், ''ஸ்ரீவைஷ்ணவச் செல்வங்கள்'' என்று நாம் அனைவரும் புகழ்ந்து போற்றிப் பயின்று, பயன் கொள்ளத் தக்க ஞானக் கருவூலங்கள் ஆகும்.

# ஆயிரம் நாமம்

சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள் (பாலகவி)
தேவகோட்டை.

பரம்பொருளாகிய சிவபெருமான் உயிர்களிடத்து வைத்த பெருங் கருணையினால் வேத சிவாகமங்களாகிய முதல் நூல்களை அருளிச் செய்தார். அநாதியே, ஆணவமலத்தால் பிணிக்கப்பட்டு அதனால் அறிவிச்சை செயல்கள் தடைப்பட்டுவிடச், சடம்போற்கிடந்த உயிர்களுக்கு மாயாமலத்திலிருந்து, தனுகரண புவன போகங்களை வழங்கிய ஆண்டவன் அவைகள் மலநீக்கம் பெற்றுப் பேரின்பப் பேற்றை அடைதல் வேண்டுமென்னும் திருவுள்ளக் குறிப்புடன், ஆரணங்களையும், ஆகமங்களையும் அருளித் தந்து, அம்முதனூல்களின் வழியே ஒழுகுமாறும் உயிர்களுக்கு ஆணை தந்தருளினார்.

உருவம், அருவுருவம், அருவம் ஆகிய மூன்று நிலைகளையும் கடந்து சொரூப நிலையில் துளக்கம் ஒரு சிறிதும் இன்றிப், பேரொளிப் பிழம்பாக விளங்கும் சிவபெருமான் தனக்கென எதுவும் வேண்டுதலில்லாத பெரு நிலையில் திகழ்பவராயினும் ஆன்மாக்களாகிய நம் மனோரது அல்லல் கண்டு இரங்கும் அவரது அருட் குறிப்பே அவரைத் தன்னிலையிலிருந்து கீழிறங்கி அருவத்தையும். அருவுருவ நிலையையும் தாண்டி உருவநிலையை மேற்கொள்ளுமாறு செய்தது. அங்ஙனம் அவர் கீழிறங்கி வந்து வேத சிவாகமங்களை அருளித் தந்திராவிட்டால், சிவ புண்ணியங்களாகிய நற்றவங்களைச் செய்து, அதனால் இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் ஆகியவற்றைப் பெற்றுச் சிவப் பேறடைவார் ஒருவரும் இலராவர். இதனை ''ஆரணம் ஆகமங்கள் அருளினால் உருவு கொண்டு, காரணன் அருளானுகில் கதிப்பவர் இல்லையாகும்.'' என்று சிவஞான சித்தியார் கூறுகின்றது.

மலத்தொடர்பால் வருகின்ற துன்பங்களிலிருந்து நீங்கிப் பேரின்பம் பெறுவதற்குரிய உபாயங்களை வேத சிவாகமங்கள் நமக்கு உணர்த்துகின்றன. இதனை நமது திருமூல தேவர், பிறிதொரு திருமந்திரத்தில் ''வேதத்தை விட்ட அறமில்லை வேதத்தின், ஓதத்தகும் அறம் எல்லாம்உள'' என்று உணர்த்தியருளுகின்றார். பக்குவரும், அபக்குவருமாகிய இருவரையும் கொண்டது உலகமாதலின் பக்குவர் பொருட்டாகச் சிவாகமங்களும், அபக்குவர் பொருட்டாக வேதங்களும் இறைவனால் முறையே அருளிச் செய்யப்பெற்றன.'' ஆரண நூல் பொது, சைவம் அருஞ சிறப்பு நூலாம்,'' என்பதும், ''நீதியினால் உலகர்க்கும் சத்திநி பாதர்க்கும் நிகழ்த்தியது'' என்பதும் சிவஞான சித்திரியாரில் கூறப்பெறுவனவாகும்.

சிவபெருமான் தமது ஞானசக்தி, கிரியா சக்திகளை ஒத்துத் தொழிற் படுத்துவதற்குக் கொள்ளும் சதாசிவத் திருமேனியில் உள்ள திருமுகங்கள் ஐந்து. அவை உச்சி நோக்கிய ஈசான முகமும், கிழக்கு நோக்கிய தத்புருஷ

முகமும், தெற்கு நோக்கிய அகோர முகமும், வடக்கு நோக்கிய வாமதேவ முகமும், மேற்கு நோக்கிய சத்தியோசாத முகமும் ஆகும். இவற்றுள் தத்புருஷ முகத்திலிருந்து இருக்கு வேதமும், அகோர முகத்திலிருந்து யசுர் வேதமும், வாமதேவ முகத்திலிருந்து சாம வேதமும் சத்தியோசாத முகத்திலிருந்து அதர்வண வேதமும், முறையே தோன்றின. மேலானதாகிய ஈசான முகத்திலிருந்து சிவாகமங்கள் இருபத்தெட்டும் தோன்றின.

சிவபெருமானிடமிருந்து வேதங்களைக் கேட்டவர்கள் அசுத்தமாயா புவன வாசிகளாகிய இருடிகள். சிவாகமங்களைக் கேட்டவர்கள் சுத்தமாயா புவனவாசிகளாகிய பிரணவர் முதலிய சிவமூர்த்திகளும் உருத்திர மூர்த்திகளுமாவர். இந்த முறைபற்றிச் சிவாகமங்கள் சிவபேதமெனவும், உருத்திர பேதமெனவும் இருவகைப்பட்டு விளங்கும். இவற்றுள் சிவபேத ஆகமங்கள் பத்து, உருத்திர பேத ஆகமங்கள் பதினெட்டாம்.

காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அஜிதம் தீப்தம், சூட்சுமம், சகஸ்ரம், அம்சுமான், சுப்ரபேதம் ஆகிய பத்துச் சிவாகமங்களையும், பிரணவர் முதல் சகி வரையுள்ள முப்பது சிவமூர்த்திகளும் கேட்டனர்.

விஜயம், நிஸ்வாசம், சுவாயம்புவம், அநலம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம்; சந்திரஞானம், விம்பம், புரோத்கீதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோத்தம், பாரமேசுவரம், கிரணம், வாதுளம் ஆகிய பதினெட்டுச் சிவாகமங்களையும், அநாதிருத்திரர் முதல் மாகாளர் வரையுள்ள முப்பத்தாறு உருத்திர மூர்த்திகளும், சதாசிவ மூர்த்தியிடமிருந்து கேட்டார்களென்று அருள் நூல்கள் கூறுகின்றன.

அபக்குவ நிலையில் உள்ள உயிர்கள் வேத நெறியைக் கடைப்பிடித்துப் பசு புண்ணியமாதிய நற்செயல்களைச் செய்து சித்தாந்த சைவ நெறியைக் கடைப்பிடிக்கும் பக்குவத்தை அடைவர். பின்னர், சிவபெருமானால் பேரின்பம் பெறுதற்குரிய சாதனங்களென அருளிச் செய்யப் பெற்ற சரியை, கிரியை, யோகமாகிய நற்றவங்களில் நிற்றலும் அதனால் வரும் உண்மை ஞானத்தை அடைதலும் நிகழும். இங்ஙனம் இறைவன் அருளிய உபாயத்தைக் கடைப்பிடித்தார்க்கன்றி ஏனையோர்க்கு எவ்வாற்றாலும் உய்தி எய்துமாறில்லை. இதனைத் திருமூல தேவநாயனார் தமது திருமந்திர மாலைக் கடவுள் வாழ்த்து முப்பத்து நான்காவது செய்யுளில் தெளிவு படுத்துகின்றார். அந்தத் திருப்பாட்டு,

சாந்து கமழும் கவரியின் கந்தம்போல்
வேந்தன் அமரர்க் கருளிய மெய்ந்நெறி
ஆர்ந்த சுடரன்ன ஆயிரம் நாமமும்
போந்தும் இருந்தும் புகழுகின்றேனே.

என்பதாகும்.

நறுமணப் பொருள்களில் சந்தனமும், கத்தூரியும் சிறந்தவை "கத்தூரி கமழ் சாந்தும் பணித்தருள வேண்டும்" என்பது ஆளுடைய நம்பிகள் திருவாக்கு. வேதம் பொது நூலும், சிவாகமம் சிறப்பு நூலுமாதலின் வேதத்தின் முடிபுகள் அனைத்தும் சிவாகமத்தின் அடி நிலையில் அமைந்து விளங்கும். சிவாகமத்தின் முடிபுகளோ; அதன் முடி நிலையில் சிறப்புற்றிருக்கும். இங்ஙனம் வேத சிவாகமங்களாகிய இரு பெரு நூல்களின் முடிபுகளும் ஒருங்கே சிவாகமத்தில் விளங்கிக்கொண்டிருப்பது பற்றி, நறுமணப் பொருள்கள் இரண்டு கூடிய கலவையைப் போலச் சிவாகமம் அமைந்துள்ளதென உணர்த்தச் "சாந்து கமழும் கவரியின் கந்தம் போல்" என்று ஆசிரியர் அருளிச் செய்தார்.

வேந்தன் என்பது தனக்கு மேலொரு தலைவனில்லாத கடவுள் என்ற பொருளிலும், அமரர் என்பது ஆன்மாக்களில் மேலான நிலையை அடைந்தவரென்ற பொருளிலும் இத்திருப்பாடலில் உள்ளன, "விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்தே எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும்" என்பது ஆளுடைய அரசர் திருவாக்கு. உலகத்திலுள்ள எல்லாச் சமயங்களும் படி முறை



திருவாரூர்த் தியாகராஜ சுவாமி கோயிலின் திருத்தேர் ஓடுவதற்குப் பெருமுயற்சி எடுத்துக்கொண்டவரும், அக்கோயிலின் பரம்பரை அறங்காவலரும் ஆகிய **திரு. வி. எஸ். தியாகராஜ முதலியார்** அவர்களுக்கு, ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு **ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள்** அவர்கள், நமது அறநிலைய ஆணையர் **திரு, கே. எஸ். நரசிம்மன் B.A.B.L., I.A.S.** அவர்கள் மூலம் ஜரிகைச் சால்வை வழங்கிப் போர்த்துவித்துச் சிறப்பித்தல். *(17—5—70).*



திருநெல்வேலி மாவட்டம் வீரவநல்லூர் ஸ்ரீ பூமிநாதசுவாமி கோயிலுக்கு, அறநிலைய அமைச்சர் மாண்புமிகு திரு, கே. வி. சுப்பையா, B. A., அவர்கள், வருகை தருதல் (13-4-70).

யில் பயனுடையவைகளே என்பது சித்தாந்த சைவர்களால் ஒப்புக்கொள்ளப் பெறுவதாதலின் இடைப்பட்ட பயன்களைத் தருகின்ற அவ்வெல்லாச் சமயங்களிலும் மேம்பட்ட உண்மையுடையது சிவாகம நெறி என்பதையும், அந்நெறி மற்றையோர் நெறிபோல மக்களால் உணர்த்தப்பெருது இறைவனுல் உணர்த்தப் பெற்றதென்பதையும் ''வேந்தன் அமரர்க் கருளிய மெய்ந்நெறி'' என்று புலப்படுத்தியருளினர்.

சிவாகமங்களில் குறிக்கப்பெறுகின்ற சப்த கோடி மகாமந்திரங்களும் சிவபெருமானது திருநாமங்களுடன் கூடி நின்று, நினைப்பவர்களைக் காத்து வருகின்றன. அதனுலேயே "பூவனூர்ப் புனிதன் திரு நாமந்தான், நாவில் நூறு நூறுயிரம் நண்ணினுர்'' எனவும் ''ஆயிரம் திருநாமம் பாடி நாம்தெள்ளேணம் கொட்டாமோ'' எனவும் தேவார திருவாசகங்கள் முழங்கிக் கொண்டிருக்கின்றன. சிவாகமங்களில் குறிக்கப்பெறும் ஆயிரக்கணக்கான சிவநாமங்கள், உயிர்களின் மலவிருளை நீக்கும் ஞான சூரியர்களாய் உதவி புரிகின்றன என்பதை ''ஆர்ந்த சுடரன்ன ஆயிரம் நாமம்'' என்பதால் அறிகின்றோம்.

இந்தத் திருநாமங்களை எந்த வேளையிலும் இடையீடின்றிப் புகழ்ந்தோதி இன்பம் பெற்றவர் திருமூல தேவநாயனுர். அவரது அருளுரையைப் பாடலின் இறுதியில் கண்டு நாமும் அந்த நற்பேற்றை அடைவோமாக.

நலமே தழைக்க.




திருத்தணிகை முருகன் கோயிலின் தெப்ப வெள்ளோட்ட விழாவில், நமது அறநிலைய ஆணையர் திரு. K. S. நரசிம்மன், B.A., B.L., I.A.S. அவர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தல்.

# திருத்தணிகையில் தெப்பவிழா

திரு. கே. எஸ். நரசிம்மன், B. A., B. L., I. A. S.,
ஆணையாளர், அறநிலைய ஆட்சித்துறை, தமிழ்நாடு அரசு.

## முன்னுரை :

தமிழ் நாட்டிலுள்ள முருகன் தலங்களுள் **திருத்தணிகை** என்பது மிகவும் சிறப்புடைய தொன்று. அது சென்னைக்கு அருகில், தமிழகத்தின் வட எல்லையாக மாண்புற்று விளங்குகின்றது. முருகனுக்கு உரிய ஆறுபடை வீடுகள் எனப்படும் தலங்களுள், குன்றுதோருடல் என்னும் தலமாக, திருத்தணிகை என்னும் இத்தலம் அமைந்து திகழ்கின்றது. ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே, நக்கீரர் என்னும் சங்ககாலப் புலவர் பாடிய **திருமுருகாற்றுப்படை** என்னும் பழம் பெரும் செந்தமிழ்த் துதி நூலில், குன்றுதோருடல் பற்றிய பகுதியில் வரும் வருணனைகள், திருத்தணிகைக்கும் பெரிதும் பொருத்தமாக இருக்கின்றன. ஆதலின் இத்தலத்தினுடைய பழமையையும் பெருமையையும் யாவரும் இனி துணரலாம்! ''வரை இடங்களிற் சிறந்தது இத்தணிகைமால் வரையே'' எனக் கச்சியப்ப சிவாச்சாரியர் பாடிய கந்த புராணம், இத் தலத்தைப் புகழ்ந்து பாடுகின்றது.

## பெயர்க் காரணம் :

முருகப் பெருமான், சூரபதுமன் முதலிய அசுரர்களுடனும், நம்பிராசன் முதலிய வேடர்களுடனும், போர் முடித்துச் சினம் தணிந்து அமர்ந்த இடம் ஆதலால் இத்தலம் தணிகை எனப் பெயர் பெற்றது. போர் தணிந்த பின் வந்து, முருகன் தங்கியதனுல், **செருத்தணி** என்றும் இதற்குப் பெயர் வழங்கும் (செரு - போர்). கச்சியப்ப சிவாச்சாரியர் தமது கந்த புராணத்தில், இப்பெயரையும் வழங்கி உள்ளார்.

''தணியா அதிமோக தயாபரன்'' ஆகிய முருகப் பெருமான், தாம் வள்ளி அம்மையாரின் மீது கொண்ட **தணியா** அதிமோகம் **தணியும்** படி, பல இனிய திருவிளையாடல்கள் நிகழ்த்தி, வள்ளி அம்மையாரை மணந்து கொண்டு மகிழ்ந்து தங்கி எழுந்தருளி இருக்கும் தலம் ஆதலால், இதற்குத் **தணிகை** எனப் பெயர் அமைந்தது, என்றும் பெரியோர்கள் கூறுவர். அதற்குச் சான்ருக வள்ளி அம்மையார் தோன்றி வளர்ந்து வந்த **வள்ளி மலையும்**, இத்தலத்திற்கு அருகில் இருத்தல் காணலாம்.

## தலத்தின் சிறப்பு :

திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த சிவஞான சுவாமிகளின் மாணவராகிய **கச்சியப்ப முனிவர்**, இதற்குத் தலபுராணம் பாடியுள்ளார். தல புராணங்களுள் திருத்தணிகைப் புராணம், செந்தமிழ்க் கவிச் சுவையில் மிகவும் சிறந்து விளங்குவதொன்ருகும். திருவருட்பா பாடிய **இராமலிங்க அடிகளார்** இத்தலத்தில் மிகவும் ஈடுபாடு கொண்டவர். திருத்தணிகை முருகப் பெருமானே அவருக்கு வழிபடு கடவுளாக அமைந்து அருள் வழங்கினர், என்பது வரலாறு. திருவருட்பாவில் திருத்தணிகை பற்றிய பதிகங்

கள் பற்பல உள்ளன. அருணகிரிநாதர் இத் தலத்திற்கு மிக அதிகமாக, 83 திருப்புகழ்ப் பாடல்களை அருளிச் செய்துள்ளார்.

திருநாவுக்கரசர் திருப்புறம்பயம் திருத் தாண்டகத்தில், ''கல்மலிந்து ஓங்கு கழுநீர்க் குன்றம்'' என்று பாடி இருப்பது இத்தலத்தையே குறிப்பதாக ஆராய்ச்சியாளர்கள் கூறுவர். அங்ஙனமாயின், இத்தலம் 1300 ஆண்டுகளுக்கு முன்பே, மிக்க சிறப்புற்றுப் பழமையும் பெருமையும் வாய்ந்ததாக விளங்கி இருத்தல் வேண்டும் எனத் துணியலாம்.

## சிவபிரான் கோயில் :

திருத்தணிகை, முருகனின் தலம் என்று மட்டுமே, நம்மிற் பலர் அறிவர். ஆனால் இஃது ஒரு சிறந்த சிவதலமும் ஆகும். இங்கே மிக்க பழமை வாய்ந்த சிவபிரான் கோயில் ஒன்றும் உண்டு. அது வீரட்டகாசர் கோயில் எனப்பெயர் பெறும். சிவபெருமானுக்கு முருகப் பெருமான் பிரணவப் பொருளை உபதேசம் செய்தபோது ''தம்மின் தம் மக்கள் அறிவுடைமை, மாநிலத் துக் மன்னுயிர்க்கெல்லாம் இனிது'' எனத் திருக்குறள் கூறுவது போலத், தமது மைந்த னாகிய முருகன் தம்மையும் விடச் சிறந்த அறிவு உடையவனாகத் திகழ்தல் கண்டு, தந்தை நிலை யில் மகிழ்ச்சி மேலிட்டுச் சிவபெருமான் பெரும் சிரிப்புச் செய்தருளினராம். ஆதலால் அக் கோயிலில் உள்ள சிவபெருமானுக்கு ''வீர அட்டகாசர்'' என்பது பெயர். (மந்தகாசம்-புன் முறுவல்; அட்டகாசம் - பெருஞ்சிரிப்பு). கி. பி. 9 ஆம் நூற்றுண்டில் விளங்கிய அபராசித வர்ம பல்லவன் (கி. பி. 875-893) என்னும் அரசன், அக்கோயிலைக் கட்டிய நம்பி அப்பி என்பவனைப் புகழ்ந்து போற்றிப் பாடியதாக,

''திருந்து திருத்தணியிற் செஞ்சடைஈ சற்குக்
கருங்காலற் கற்றளியா நிற்க—விரும்பியே
நற்கலைகள் எல்லாம் நவின்றசீர் நம்பியப்பி
பொற்பமையச் செய்தான் புரிந்து''

என்னும் ஓர் அழகிய செய்யுள் இக்கோயிற் கல் வெட்டு ஒன்றில் காணப்படுகின்றது. இதனாலும், இத்தலம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரும் மிக்க புகழ் பெற்று விளங்கியமை தெரியலாம்.

## பிரார்த்தனைத் தலம் :

திருத்தணிகை ஒரு சிறந்த பிரார்த்தனைத் தலம். கி. பி. 15 ஆம் நூற்றுண்டில் விளங்கிய அருணகிரிநாதர், ''திருப்புகழ் ஓதும் கருத்தினர் சேரும் திருத்தணி மேவும் பெருமாளே'' எனப் பாடியதற்கு ஏற்ப, ஆண்டுதோறும் சனவரி மாதம் முதல் தேதியில், பல்லாயிரக் கணக்கான அடியார்கள் திருப்புகழ் பாடிக்கொண்டு பெருந் திரளாக வந்து, மலை ஏறி முருகனை வணங்கி வழிபடுகின்றனர். அடிவாரத்தில் இருந்து மலை உச்சியை அடைய 365 படிகள் ஏறுதல் வேண்டும். ஓர் ஆண்டுக்கு 365 நாட்கள் என்பதனை இப்படிகள் குறிக்கின்றன. ஆண்டின் முதல் நாளில் இம்மலை ஏறி முருகனை வணங்கினால், ஆண்டின் 365நாட்களும் மிகவும் பயன் உள்ள வகையில், நல்ல நாட்களாக விளங்கும் என்பதனையே, இஃது உணர்த்துகின்றது.

## ஒரு வரலாற்றுச் செய்தி :

இத்தலத்திற்கு உரிய பலதிறச் சிறப்பு களுள் ஒன்றாக, ஒரு வரலாற்றுச் செய்தியையும் இங்குக் குறிப்பிடலாம். இக்கோயில் வாயிலில் தென் புறத்தில், ''பிரசன்னகாதர் ஈசுவரர்'' சந்நிதி ஒன்று இருக்கின்றது. காதர் என்ற நவாபு அரசர் ஒருவர், தம்மைத் துன்புறுத்தி வந்த ஒரு கொடிய நோயானது தாம் பிரார்த் தித்துக் கொண்டபடி தீர்ந்து நலம் அடைந்த தனால், இங்கு ஓர் இலிங்கத்தைப் பிரதிட்டை செய்து, வாத்திய மண்டபத்தையும் கட்டி வைத்ததாகப் பெரியோர்கள் கூறுகின்றனர். இந்து முசுலீம் ஒற்றுமைக்கு இக்கோயில் ஒரு நல்ல சான்றாகத் திகழ்கின்றது. பழனி, திருப்பரங்குன்றம், கதிர்காமம் முதலிய வேறு பிற தலங்களிலும், நமது முசுலீம் சகோதரர்கள் முருகனிடம் பக்தி பாராட்டி வருவது, இங்கு நாம் நினைந்து இன்புறத் தக்கது.

## ஆபத்சகாய விநாயகர் :

இங்குள்ள விநாயகர் மிகவும் பிரசித்தி பெற்றவர், ஆபத்சகாயர் என்பது அவருக்குப் பெயர், வள்ளி அம்மையை முருகன் மணப்பதற்குத்தக்க நேரத்தில் யானையாக வடிவம் எடுத்துவந்து சகாயம் செய்தவர் ஆதலின், அவருக்கு ஆபத்சகாயர் எனப் பெயர் அமைந்தது. திருத்தணிகையில் அவரைச் சென்று அன்புடன் வணங்கினால், நமக்கும் அவர் ஆபத்தில் சகாயம் புரிந்தருள்வார் என்பது திண்ணம்.

## ஞானசக்திதரர் :

முருகப் பெருமானை நம் பண்டைத் தமிழ் முன்னோர்கள் பலதிற நிலைகளிலும், அழகிய வடிவங்களிலும் வைத்துப் போற்றி வந்துள்ளனர். குமாரதந்திரம், ஸ்ரீதத்துவநிதி முதலிய நமது பண்டைச் சிற்ப நூல்களில், முருகனுக்குப் பதினாறு (16)வகையான திருவுருவங்கள், கூறப்பட்டுள்ளன. அவைகளுள் ஒன்று 'ஞானசக்திதரன்' என்னும் திருவுருவம்.

சக்தி என்பது வேலுக்கு ஒரு பெயர். ஞானமே முருகனுக்கு வேலாக அமைந்திருக்கின்றது. ஆதலின் அதனை ஞானசக்தி எனவும் வழங்குவர். ஞான சக்தியாகிய வேலை, முருகன் தனது வலக்கையில் ஏந்தி இருக்கின்றான். இடக்கையைத் தனது தொடையில் வைத்திருக்கின்றான். இங்ஙனம் இரண்டு கைகள் உடையவனாய், வேலேந்தி நிற்கும் கோலத்துடன் விளங்கும் முருகனை ஞானசத்திதரன் என்பர். திருத்தணிகையிலுள்ள முருகன், ஞானசத்திதரன் என்னும் இத்திருவுருவம் உடையவனே என்பது, நாம் சிந்தித்து மகிழ்தற்குரியது. ஞானசத்திதரனாகிய திருத்தணிகை முருகப் பெருமானை வணங்கினால், நம்முடைய அறியாமையும் துன்பங்களும் நீங்கி, நாம் ஞானமும் நல்வாழ்வும் பெறலாம் என்பதில் ஐயமில்லை,

## ஆடிக் கிருத்திகை :

முருகனை வழிபடுவதற்கு வாரத்தில் செவ்வாய் அல்லது வெள்ளிக்கிழமையும், மாதத்தில் கிருத்திகையும் மிக்க சிறப்புடையன ஆகும். பொதுவாக எல்லாக் கிருத்திகைகளுமே முருகனுக்குச் சிறப்புடையதாயினும். **ஆடிமாதத்துக் கிருத்திகை** தனிப்பெரும் சிறப்பு உடையதாகப் பெரியோர்களால் கொள்ளப்பட்டுள்ளது. கந்த புராணத்தில் ''கந்த விரதப்படலம்'' என்னும் பகுதியில், கிருத்திகை வழிபாட்டின் சிறப்பும் பயனும் விளக்கப்பட்டு இருக்கின்றன.

அதனை ஒட்டி ஆடி மாதத்துக் கிருத்திகை முருகனின் தலங்கள் எல்லாவற்றிலும், மிகச் சிறப்பாக விழாக்கள் நடத்திக் கொண்டாடப்பட்டு வருகின்றது. திருத்தணிகையில் இவ்விழா, தனிப்பெரும் சிறப்புடன் நடைபெற்று வருதலை அன்பர்கள் அனைவரும் அறிவர். அண்மையில் திருப்பணிகள் முடிந்து, மிகவும் சிறந்த முறையில் கும்பாபிஷேகம் முதலியன நடைபெற்று, நிறைபிறை நீர்மையில் நாள் நாளும் முறை முறையே வளர்ந்தோங்கி வருகின்ற இக்கோயிலில், இந்த ஆடிக் கிருத்திகையின்போது (ஜூலை மாதம் 26, 27, 28-ஆம் தேதிகளில்) நிகழ இருக்கும் தெப்போற்சவம், பக்தர்கள் அனைவரும் தரிசித்து மகிழத்தக்கதாகும்.

## தெப்ப விழா :

திருக்கோயில்களில் நடைபெறும் திருவிழாக்கள், ஒவ்வொன்றும் அரிய பெரிய தத்துவ நுட்பங்கள் அமைந்தவை. அவற்றில் தெப்போற்சவமும் ஒரு சிறந்த தத்துவ நுட்பத்தை உடையது.

''பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்
இறைவனடி சேரா தார்''

எனத் திருவள்ளுவர் அருளிய திருக்குறளை அன்பர்கள் அனைவரும் அறிவர். அதன்படி. "பிறவியாகிய கடலில் வீழ்ந்து அகப்பட்டுக்கொண்டு தத்தளிக்கும் சிற்றுயிர்களாகிய நமக்கெல்லாம், ஒரு தெப்பம்போல இருந்து உதவி புரிந்து, இறைவன் நம்மை வீடு பேறு ஆகிய கரையில் கொண்டுபோய்ச் சேர்த்து அருள் புரிகின்றான்'' என்பதே, தெப்ப விழாவின் தத்துவமாகும். ''துன்பக் கடலிடைத் தோணித் தொழில் பூண்டு, தொண்டர் தம்மை இன்பக் கரை முகந்து ஏற்றும் திறந்தன'' எனத் திருநாவுக்கரசரும் அருளிச் செய்து இருத்தல் காணலாம்.

## முடிவுரை :

ஆதலின் திருத்தணிகை முருகப் பெருமானின், ஆடிக் கிருத்திகைத் தெப்ப விழாவைப் பக்தர்கள் அனைவரும் தவறாமல் தரிசித்து மகிழ்ந்து, முருகனின் திருவருளைப் பெறுவார்களாக !

# மகாபாரதம்

அருள்மொழியரசு
திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்

## அறிமுகஞ் செய்தல் :

அம்மா! இதோ! இவர் 'தான்' என்ற தருக்கும் முறுக்கும் உடைய துர்யோதனன். இவர் அருகில் உள்ளவர்கள் துர்யோதனனுடைய உடன் பிறந்தவர்கள். அங்கே அமர்ந்திருப்பவர் சகுனி; இவர் கர்ணன். இவர் அச்வதாமன்; இவர் விராட மன்னர்; இவர் பத்ர நாட்டு மன்னர், சல்லியன். இவர் சிசுபாலன். இவர் சராசந்தன். அங்கே அழகிய ஆதனத்தில் அமர்ந்திருப்பவர்கள் பலராமரும் கிருஷ்ணரும். இன்னும் பலப்பல தேயங்களில் இருந்து உன்னை நாடி வந்து அநேக அரசர்கள் நட்சத்திரக் கூட்டங்கள் போல் அமர்ந்திருக்கின்றார்கள். அன்புள்ளவனே! இந்த வில்லை வளைத்து லட்சியத்தை எவன் அடிக்கின்றானோ அவனை நீ வரிக்கக் கடவாய்'' என்றான்.

அரசர்கள் நிறைந்த கூட்டம். அரவம் அடங்கியிருந்தது. திரௌபதி தனக்குக் கிடைப்பாள் என்று பலரும் மனக்கோட்டை கட்டினார்கள். சிலர் வில்லினிடம்போய் அதன் பெருமையைப் பார்த்து இது நம்மால் ஆகுந்தரம் அன்றென்று, மீளவும் வந்து தத்தம் ஆதனங்களில் அமர்ந்தார்கள். உருத்திரர்கள், வசுக்கள், அமரர்கள், கந்தர்வர்கள், நாரதர் முதலிய இருடியர்கள் முதலியவர்கள் விண்ணிடை நின்று இந்த சுயம்வரச் சிறப்பைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

யதுகுலத்து மன்னர்கள் வில்லை வளைக்க எழுந்தார்கள். கண்ணபிரான் அவர்களைத் தடுத்துப் பலராமரைப் பார்த்து ''அண்ணா! அதோ அந்த அந்தணர்களுடைய கூட்டத்திற்கு இடையில் பாண்டவர்கள் நீறுபூத்த நெருப்பு போல் அமர்ந்திருக்கின்றார்கள்'' என்று கூறினார். பலராமர் கேட்டு உள்ளம் உவந்தார். இனிய வாத்தியங்கள் ஒலித்துக் கொண்டிருந்தன. பல மன்னர்கள் எழுந்து வில்லை எடுத்து நாணேற்ற முடியாமல் வலிமையிழந்து நாணத்துடன் இருந்தார்கள்.

## அரசர்கள் அவமானம் அடைதல் :

துரியோதனன் எழுந்து வில்லை எடுத்து நிறுத்தி நாணை இழுத்து மேற்கொண்டு இயலாத வனுகி மிக்க அவமானத்தையடைந்து, திரௌபதியைக் குறுக்குப் பார்வையால் பார்த்து பெருமூச்சுவிட்டுத் தன் ஆசனத்தில் அமர்ந்தான். சிசுபாலன் வில்லை வளைத்து உளுந்தளவு மிச்சம் இருக்கையில் வலியிழந்து கீழே விழுந்து உருண்டு மானம் இழந்தான். சராசந்தன் கடுகளவு இருக்கையில் வில் திரும்பியடிக்க வீழ்ந்து உருண்டான். சல்லியன் வில்லை வளைக்கும் போது பயிற்றளவில் முடியாது வீழ்ந்தான். கர்ணன் வில்லை எடுத்து வளைக்கும்போது ஒரு மயிரளவு இருக்கையில் முடியாது வில்லுடன் வீழ்ந்து மண்ணைக் கவ்வினான். இவ்வாறு மன்னர்களில் சிறந்த மகாவீரர்கள் பலரும் வில் நாணேற்ற முடியாது அவமானப்பட்டதைக்

கண்ட மற்ற மன்னர்கள் ஆசையடங்கி ஓசையடங்கி அமர்ந்திருந்தார்கள். அரசர்கள் முயற்சியிழந்து அயர்ச்சியுற்றபோது, அந்தணர்களில் நடுவில் அமர்ந்திருந்த அருச்சுனன் எழுந்து வில்லை நோக்கி நடந்தான்.

### அந்தணர்கள் ஆசி :

பிராம்மணர்கள் இதைக்கண்டு திடுக்கிட்டார்கள். ''கர்ணன் முதலிய பேராற்றல் படைத்த மன்னர்களால் முடியாத இவ்வில்லை இச்சிறுவன் வளைக்க வல்லவனோ? வளைக்க முடியாது திண்டாடுவானானால் இந்த அவமானம் நம் குலத்துக்கே பெரும் வெட்கத்தை உண்டாக்குமே?'' என்று கூறி வருந்தினார்கள். சிலர் ''இவன் மந்திர சக்தியால் வில்லை வளைக்கக் கடவது, வெற்றி பெறக் கடவது. நம் குலத்துக்குப் பெரும் புகழையுண்டாக்கட்டும்'' என்று மான் தோல்களை வீசி வாழ்த்தி ஆரவாரம் புரிந்தார்கள். அர்ச்சுனன் திருஷ்டத்யும்னனைப் பார்த்து ''மன்னவன் மகனே! இந்த வில்லை அந்தணர்கள் வளைத்து லட்சியத்தை அடித்தால் உன் தங்கை மாலையிடுவாளோ?'' என்று வினவினான். திருஷ்டத்யும்னன் ''அந்தணரே! இங்கே குலத்தடை கிடையாது, எக்குலத்தில் பிறந்தவனானாலும் வில்லை வளைத்து லட்சியத்தை அறுத்தவனுக்கு என் தங்கை உரியவள். இது சத்தியம்'' என்றான்.

### வில்லை வளைத்தல் :

பார்த்தன் அந்த அவையில் உள்ளோர்கள் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருக்கும் போது, அந்த உயர்ந்த வில்லை வலமாக வந்தான். சிவபெருமானை மனத்தால் வணங்கினான். கண்ணபிரானை நினைத்து வில்லைச் சுலபமாக எடுத்து ஒரு நொடியில் நாண் ஏற்றினான். ஒரு பாணத்தை எடுத்துத் தொடுத்தான். அது மேலே சுழன்று கொண்டிருந்த வட்டப் பலகையின் தொளை வழியே கணையைச் செலுத்தி அதன் மீதிருந்த மச்சவடிவமான லட்சியத்தை அடித்தது. அப்போது மலர்மழை சிந்தியது. விண்ணவரும் மண்ணவரும் மகிழ்ச்சியால் ஆரவாரம் புரிந்தார்கள். வாத்தியங்கள் ஒலித்தன. திரௌபதி மிக்க மகிழ்ச்சியடைந்து அவனை அர்ச்சுனன் என்று தன் அறிவுக் கண்ணால் பார்த்து அவனுடைய கழுத்தில் வெண்மையான மலர்மாலையைச் சூட்டினாள். இந்திரனை இந்திராணியும், அக்கினிதேவனை சுவாகா தேவியும், திருமாலைத் திருமகளும், ஆதித்தனை உஷா தேவியும், மதனனை இரதியும், சிவபெருமானை உமாதேவியும் அடைந்ததுபோல், திரௌபதி தனஞ்சயனையடைந்து வேடனைத் தன் கணவனாகவரித்து, கண்பார்வையாலேயே அவனுடன் பேசுகின்றவள் போல் மகிழ்ந்தாள். அந்தணர்கள் மகிழ்ந்தார்கள். அரசர்கள் நாணத்தால் தலை குனிந்தார்கள். தனஞ்சயன் திரௌபதி பின் தொடர அச்சபையினின்றும் புறப்பட்டான்.

### அரசர்களின் சீற்றம் :

துரியோதனன் முதலிய அரசர்கள் அனைவரும் கோபத்தால், கொதிப்புற்றார்கள். ''நாம் துருபதனால் அழைக்கப்பட்டு வந்தோம். துருபதன் நம் அனைவரையும் துரும்பாக நினைத்துத் தன் புதல்வியை ஒரு பிராம்மணனுக்குக் கொடுக்கின்றான். செடியை வளர்த்துக் காய்க்கின்ற காலத்தில் வெட்டுகின்றான். நம்மை அவமதிக்கின்ற இந்தக் கொடியவனை நாம் ஒன்று சேர்ந்து கொல்லுவோம். இவனால் நம் அரசகுலம் அவமானத்தையடைந்தது. இவனுடைய மகளையும் கொல்வோம். திரௌபதி நம்மில் ஒருவரை விரும்பவில்லையானால் அவளையுந் தீயில் இட்டுக் கொளுத்துவோம் என்று கூறி எல்லோரும் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு துருபதன் மீது பாய்ந்தார்கள்.

அவர்களது அடாத செயலைக் கண்டு துருபதன் திகைத்தான். பாண்டு புத்திரர்களாகிய பீமார்ச்சுனர்கள் இதைக் கண்டு காலாக்கினி உருத்திரர்களைப் போல் சீறி அரசர்களை எதிர்த்தார்கள். பீமன் வானளாவிய ஒரு மரத்தைப் பிடுங்கி இலைகளை உதறினான். தண்டாயுதத்துடன் இயமனே நிற்பதுபோல் அவன் அருச்சுனனுக்கு அருகில் நின்றான். அதைக்கண்டு அரசர்கள் வியப்புற்றார்கள்.

கண்ணபிரான் பலராமரைப் பார்த்து ''அண்ணா! அதோ அழகிய வடிவுடன் நிற்கின்

ருரே அவர் தருமர்; மரத்தைப் பிடுங்கிச் சிங்க ஏறுபோல் நிற்கின்ருனே இவன் பீமன்; பெரிய வில்லை வளைத்து மகாருத்ர மூர்த்திபோல் காட்சி தருகின்ருனே இவன் விஜயன்: இரண்டு முருகக் கடவுளைப்போல் நிற்கின்ருர்களே அவர்கள் நகுல சகாதேவர்கள் என்று நான் கருதுகின் றேன். நம் அத்தையின் குமாரர்கள் அரக்கு மாளிகையிலிருந்து விடுபட்டார்கள் போலும்'' என்ருன். பலராமன் ''கண்ணு! மிகுந்த மகிழ்ச்சி. நம் அத்தை தம் புத்திரர்களுடன் பிழைத்தது பெரும் பாக்கியம். இது மகிழ்ச்சிக் குரியது'' என்ருர்.

பிராம்மணர்கள் மான்தோலை எடுத்துக் கொண்டு வீசியும், கமண்டலங்களை எடுத்து ஆட்டியும் மன்னர்களுடன் போருக்குப் புறப் பட்டார்கள். அர்ச்சுனன் அவர்களின் அன்புச் செயலைக் கண்டு சிரித்து ''நீங்கள் பார்ப்பவர் களாக நில்லுங்கள். நான் கூர்மையான கணை களால் மந்திரங்களால் நாகங்களைத் தடுப்பது போல் இவர்களைத் தடுத்துவிடுவேன்'' என்ருன். ''கன்யாசுல்கமாகக் கிடைத்த பெரிய வில்லை வளைத்து நின்ருன். கர்ணன் முதலியோர் எதிர்த்து வருகின்ற பிராம்ம ணனைக் கொன்ருல் அதுபிழையாகாது'' என்று கூறிக்கொண்டு எதிர்த்தார்கள். கர்ணனைக் கடுமையாக எதிர்த்து அர்ச்சுனன் போர் செய்தான். கர்ணன் அர்ச்சுனனுடைய போர்த் திறத்தைப் பார்த்து ''வேதியனே! உன் வில் திறத்தைக் கண்டு மகிழ்கின்றேன். நீ உருவங் கொண்டுவந்த தனுர்வேதமா? அல்லது பரசு ராமரா? அல்லது வஜ்ரபாணியாகிய இந்தி ரனே?மறையவர்வடிவில் மறைந்திருக்கின்ருய். என்னுடன் நின்று போர் செய்ய இந்திரனும் அர்ச்சுனனுமே வல்லவர்கள். மற்றவர் வல்லவ ரல்லர். அர்ச்சுனனும் மற்றப் பாண்டவர் களும் அரக்கு மாளிகையில் எரிக்கப்பட்டார் கள். அர்ச்சுனனைத் தவிர வேறு ஒருவன் என்னைப் போரில் வெல்ல முடியாது; நீ யார்?'' என்று கேட்டான்.

### கர்ணன் தோல்வி :

பார்த்தன், ''கர்ணு! நான் தனுர்வேத மல்லேன். பரசுராமருமல்லேன். குரு பக்தி யால் தெய்வாஸ்திரங்களில் தேர்ந்தவன்: அசையாமல் நில்'' என்று கூறிச் சிரித்துக் கொண்டே கர்ணனுடைய வில்லை அறுத்து உடம்பைக் கணைகளால் புண்ணுக்கினுன். கர்ணன் பலமுறை வேறுவேறு வில்லை எடுத் தான். அவற்றையெல்லாம் அர்ச்சுனன் முறித்து அவன்மீது சரமாரி பொழிந்தான். கர்ணன் நடுங்கிப் போரைவிட்டு ஓடினுன்.

சல்லியனைப் பீமன் எதிர்த்துப் போர் புரிந் தான். இரண்டு மதயானைகள் போல் இழுத்துக் கொண்டு கோபத்துடன் போர் நடந்தது. பீமன் சல்லியனை ஓங்கிக் குத்திக்கீழே தள்ளினுர். அதைக் கண்டு வேதியர்கள் சிரித்தார்கள். தருமர் குறிப்பாகக் கொல்லாதே என்று பீம னைப் பார்த்தார். அதனல் பீமன் சல்லியனைக் கொல்லாதுவிட்டான். தருமர் துரியோத னனைப் பல பாணங்களினுல் அடித்தார். அவன் அடிபட்டு ஓடினுன். நகுல சகாதேவர்களால் மற்ற அரசர்கள் அடிபட்டுத் தோல்வி யடைந் தார்கள். பிராம்மணர்களுடன் வென்ருலும் தோற்ருலும் பழிபாவந்தான். ஆதலால் பிராமணர்களுக்கு வணக்கம் என்று கூறிக் கொண்டு அரசர்கள் போரினின்றும் புறங் கொடுத்து ஓடினுர்கள். சில அரசர்கள் பீமனை யும் அர்ச்சுனனையும் பார்த்து ''இந்த உத்தம மான பிராம்மணர்கள் எங்கே பிறந்தார்கள். எங்கே வாழ்கின்ருர்கள்? நாம் இதனை அறிய வேண்டும். ராதா புத்திரனை கர்ணனுடன் போர் புரிய வல்லவர்கள் துரோணரும் கிருஷ்ணரும் பரசுராமரும் அர்ச்சுனனுமன்றி மற்றவருக்கு ஆற்றல் ஏது? துரியோதனனை எதிர்த்து வெல்பவன் எவன்? வல்லியம் போன்ற சல்லியனை வீழ்த்த வல்லவர் பலராம ரும் பீமனுமேயாகும். ஆ! ஆ! இவர்கள் பெரிய வர பலமுள்ளவர்கள்'' என்று பேசிக் கொண்டார்கள்.

கண்ணபிரான் அரசர்களைப் பார்த்து ''திரௌபதி, தருமமாக அடையப் பட்டாள்'' என்று சமாதானஞ் செய்து போரினின்றும் தடுத்தார். ''சுயம்வரத்தில் பிராம்மணர்கள் மேன்மை அடைந்து விட்டார்கள். மன்னவன் மகள் மறையவனையடைந்தாள்'' என்று சொல்லிக்கொண்டு வேந்தர்கள் வாடிய முகத்

துடன் தத்தம் நகரஞ் சேர்ந்தார்கள். குந்தி தேவி உரிய காலத்தில் தன் மைந்தர்கள் திரும்பி வராமையால் உள்ளம் வருந்தினுள். என் மைந்தர்கள் திருதராட்டிர புத்திரர்களால் அறியப்பட்டுக் கொல்லப் பட்டார்களே? கொடியவர்களான அரக்கர்களால் பழைய பகை காரணம்பற்றிக் கொல்லப்பட்டார் களோ?'' என்று பலப்பல நினைந்து சிந்தாகுல முற்றுள்.

## குந்தியின் வாழ்க்கை :

பீமார்ச்சுனர்கள் திரௌபதியுடன் குயவ னுடைய சாலைக்குச் சென்று ''அம்மா! இன்று ஒரு பிட்சை பெற்று வந்தோம்'' என்றூர்கள். குந்தி உள்ளிருந்தபடியே ''ஐவரும் சேர்ந்து ஒற்றுமையாகப் புசியுங்கள்'' என்றுள். உள்ளே புகுந்த பின் கிருஷ்ணையைக் கண்டு திகைத்து, அவள் மலர்க் கரத்தைப் பற்றி ஆசி கூறினுள். தருமபுத்திரரைப் பார்த்துக் குந்திதேவி கூறுவாள். ''மகனே! நான் கூறிய சொல் பிழையாகக் கூடாதே. சேர்ந்து புசியுங்கள் என்று வழக்கம் போல் சொல்லிவிட்டேனே. இம்மாதரசிக்கு அதர்மம் வராமல் இருப்பது எப்படி?'' என்றுள். தருமர் சிறிது நேரம் ஆராய்ந்து பார்த்தார். ''தம்பீ! அர்ச்சுனு! இவள் உன்னுல் பந்தயத்தில் வெல்லப் பட்டவள். நீ இவளை மணந்துகொள் என்றூர். அர்ச்சுனன், ''அண்ணு! நமக்குள் வேற்றுமை ஏது. நாம் ஐவரும் சேர்ந்து மணஞ்செய்து கொள்வோம்'' என்றுன். ஐவர்க்கும் அப்போது அவளிடம் அன்பும் காதலும் தோன்றின. அவளைப் பார்த்து மயங்கினுர்கள்.

கண்ணபிரான் பலராமருடன் அங்குச் சென்றூர். தருமருடைய பாதங்களில் கண்ண பிரான் வந்தனஞ்செய்தார். குந்தியை வணங் கினுர். ''மறைந்திருக்கும் எங்களை நீர் எப்படி அறிந்து வந்தீர்?'' என்று தருமர் கேட்டார். கண்ணபிரான் மறைந்திருந்தாலும் அக்கினி அறியப்படும். போரில் இந்த சிறந்தசெயல் உங்களைத் தவிர வேறு யார் செய்ய வல்லார் கள்? நல்ல காலம். நீங்கள் பிழைத்தீர்கள். உங்கட்கு நன்மை யுண்டாகட்டும்'' என்று மகிழ்ச்சியுடன் உரையாடிவிட்டுத் திரும்பிச் சென்றூர். பாஞ்சால மன்னனுடைய மனதில் ஒரு பெருங்கலக்கம் உண்டாகியது. அர்ச்சுன னுக்கு என்று பெற்று வளர்த்த தன் கன்னிகை ஒரு அந்தணனுக்கு உரியவளானுளே என்று ஏமாற்றம் ஏற்பட்டது.

நடு இரவில் த்ருஷ்டத்யும்னன் தன் தந்தை யாகிய துருபதனிடம் சென்று, பணிந்து கூறுவான். ''தந்தையே! அடியேன் மாறு வேடத்துடன் அந்தப் பிராம்மணர்களின் இருப் பிடம் போய்க் கவனித்தேன். அந்தக் குயவன் சாலையில் ஒளிந்திருந்தேன். வில்லை வளைத்த வேதியனும் மரத்தைப் பிடுங்கிப் போர் புரிந்த வேதிய வேதியனும் பிட்சையெடுத்து வந்து தாயிடம் தந்தார்கள். தாய் என் தங்கையைப் பார்த்து ',அம்மா! இந்த அன்னத்தில் சிறிது எடுத்து அந்தணர்கட்குக் கொடு. இரண்டாகப் பகிர்ந்து ஒரு பாகத்தை இதோ இருக்கின்ற இந்த வீரனுக்குக் கொடு; மற்றப் பாகம் ஆறுகப் பங்கிட்டு நால்வர்கட்கும் எனக்கும் உனக்கும் ஆகட்டும்'' என்றுன். அதுபடியே என் தங்கை செய்தாள். இளையவன் தருப்பைப் பாய்களை விரித்தான். அதற்குமேல் மான் தோலிட்டு அவர்கள் படுத்தார்கள். அவர்கள் அகஸ்தியருக்குப் பிரியமான தென்திசையில் தலைவைத்துக் கொண்டார்கள். தலைப் பக்கந் தாய் படுத்தாள். கால் பக்கம் திரௌபதி படுத்தாள். என் தங்கை பிட்சான்னத்தை உண்ணும்போதும், தருப்பையின் மீது சயனிக் கும் போதும் மகிழ்ச்சியாகவே இருந்தாள். அந்த வேதியர்கள் ஆயுதங்களைப் பற்றியும் போர்த்திறத்தைப் பற்றியுமே உரையாடினுர் கள். அப்பா! வில்லை வளைத்தவனே விஜயன் என்று நான் அறிகின்றேன். மரத்தைப் பிடுங்கி மன்னர்களை ஆட்டுக் குட்டிகளைப் புலி துரத்து வது போல் துரத்தினுனே அவன் பீமன். சந்தேகமேயில்லை. பஞ்சரக்கிளிகளைப் போன்ற அந்த ஐவருடைய அன்னை குந்திதேவியேயாகும். நமது எண்ணம் ஈடேறியது. நம் தங்கை பாண்டவர்களிடம் சேர்ந்தாள்'' என்றுன். அது கேட்ட துருபதன் பெரிதும் மகிழ்ச்சி யடைந்தான்.

## திரௌபதி திருமணம் :

துருபதமன்னன் ''நீங்கள் பாண்டவர் களா?'' என்று வினவியறியுமாறு ஒரு புரோகி தரையனுப்பினுன். புரோகிதர் பாண்டவர்கள் பால் வந்து அவர்களைக் கண்டு இனிமையாகக் கூறுவார். ''உத்தமர்களே! எங்கள் மன்னர் உங்களை இன்னுர் என்று அறிய விரும்புகின்ருர். கிருஷ்ணையை மன்னவர் பாண்டு மன்னருக்கு மருமகளாக ஆக வேண்டும் என்றே கருதினுர். அது அப்படியே முடிந்திருந்தால் அவர் பேரா னந்தங் கொள்வார். ஆதலால் உங்கள் குல முறையைக் கூறுங்கள்'' என்று கேட்டார்.

## புரோகிதர் :

தருமர் அந்தப் புரோகிதரை நன்கு உப சரித்து, ''ஐயா! குலம் கோத்திரம் இவைகளை நோக்காமல் வில்லை வளைத்து லட்சியத்தை யடித்தவனுக்கே என்மகள் உரியவள் என்று மன்னவர் கூறினுர். அதுபடி இவள் எங்கட்கு உரியவள். ஆனுல் மன்னர் கருத்தும் வீணுகாது. அவ் வில், எளியவனுல் வளைக்க முடியாது தானே, ஆதலால் அவரை வருந்த வேண்டாம் என்று சொல்லும்'' என்ருர். அதே சமயத்தில் வரிசையுடனும் வாகனங்களுடனும் ஒருவன் வந்து, தருமரை வணங்கி உங்களை உணவு செய்யும் பொருட்டு மன்னவர் அழைக் கின்ருர். தாமதம் இன்றி வாருங்கள்'' என்று அழைத்தான். ஐவரும் ஐந்து தேர்களில் ஏறி ஞர்கள். குந்தி தேவியும் திரௌபதியும் ஒரு தேரில் ஏறினுர்கள். மங்கள வாத்தியங்கள் முழங்கின. புரோகிதர் விரைந்து சென்று தருமர் கூறிய மொழிகளை வேந்தனிடம் விளம் பினுர்.

## துருபதன் அழைப்பு :

பாண்டவர்கள் அரண்மனைக்குள் சென்ருர் கள். அவர்களை அன்புடன் அரசன் வரவேற்று உபசரித்தான். உயர்ந்த அன்னங்களைத் தந்து உண்பித்தான். ஒரு புறத்தில் நால்வகை மரபினர்கட்குரிய பொருள்களை அமைத்திருந் தான், பாண்டவர்கள் மன்னவர்க்குரிய பொருள்களையே விரும்பி எடுத்தார்கள். இதனுல் இவர்கள் பாண்டவர்களே என்று உறுதி செய்தான் துருபதன். துருபதன் தருமரைப் பார்த்து ''அன்பரே! உங்களை நான் அறிய விரும்புகின்றேன். பொய்தான் கொடிய பாவம். நீங்கள் உண்மை வழுவாத உத்தமர். ஆதலால் உங்களை அறிய விரும்பும் எனக்கு உள்ளதை யுரையும்'' என்று கேட்டான்.



## உண்மை உணர்ந்து உவத்தல் :

தருமர், ''வேந்தர் பெருமானே! நீர் கவலைப்பட வேண்டாம். நாங்கள் பாண்டுவின் புத்திரர்கள். அரக்கு மாளிகையிலிருந்து, தெய்வத் திருவருளால் விடுபட்டோம். உருமாறியுறைந்தோம்'' என்று அந்த விவரங் களையெல்லாம் விரிவாகச் சொல்லி, வியாசர் கூறிய மந்திரத்தை உச்சரித்தார். அந்தணர் உருவம் மாறி அரச வடிவம் பெற்ருர்கள். அப்போது துருபதன் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. தன் தவம் பலித்தது என்று கண்ணுங் கருத்துங் களித்தான்- தருமரை நோக்கி, இனி தனஞ்சயனுக்கும் என் புதல்வி கிருஷ்ணைக்கும் திருமணம் இன்றே நடத்த அனுமதி செய்யும் என்ருன். தருமர், ''வேந்தர் பெருமானே! நாங்கள் அன்னையின் கட்டளையை மீருதவர்கள். ''ஐவரும் சேர்ந்து உண்ணுங் கள்'' என்பது தாயின் கட்டளை. ஆதலால் நாங்கள் ஐவரும் அக்கினிக்கு முன் கிருஷ்ணை யைத் திருமணஞ் செய்து கொள்வோம். இது முன்னமேயே ஏற்பட்ட விதி. நீர் ஐயுருமல் செய்யும்'' என்ருர். துருபதன் ''கௌரவரே! நீர் கூறியது ஒரு காலத்திலும் அற நூல்களிலும் உலக வழக்கிலும் இல்லாத ஒன்று. நீர் உத்தம மான ஒழுக்க முள்ளவர், எல்லாக் கலைகளையுங் கற்றுணர்ந்தவர். நீர் இவ்வாறு கூறுவது முறையன்று'' என்ருன்.

## வியாசர் வருகை :

அங்கு ஒளி மயமான உருவுடைய தவசீல ராகிய வியாச முனிவர் எழுந்தருளினுர். எல்லோரும் மிகுந்த அன்புடன் அவரை முறைப்

படி வரவேற்று உயர்ந்த ஆசனத்தில் இருக்கச் செய்து வணங்கினுர்கள். துருபதன் அம்முனீந் திரரை நோக்கி, ''மாதவரே! ஒருத்திக்குப் பலர் கணவராக ஆவது அறமாகுமா? இதனை நீர் விளக்கம் புரிய வேண்டும்'' என்றுன். வியாச முனிவர் புன்னகை புரிந்து, ''இந்த நிச்சயம் பெருத பொருளைப் பற்றி உங்களின் கருத்தைக் கூறுங்கள்'' என்றுர். துருபதன் ஒருத்தி அநேகருக்கு மனைவியாவது வேதத்திற் கும் உலகத்திற்கும் ஒவ்வாதது.இதை என்மனம் ஏற்றுக் கொள்ள மறுக்கின்றது'' என்றுன். திருஷ்டத்துய்ம்னன், ''தபோதனரே! அறம் அதிக நுட்பமானது. அதை எம்மால் அளவிட்டு அறிய முடியாது. ஆனுல் ஒருத்தியைப் பலர் மணப்பது முன்னேர்கள் செய்ததாகத் தெரிய வில்லை'' என்றுன்.

தருமர், ''என் வாக்கு பொய் புகலாது. என் உள்ளம் மற நெறியிற் செல்லாது. கௌதம கோத்திரத்தில் வந்த ஐடிலை என்பவள் ஏழு முனிவர்களை மணந்தாள் என்றும், வார்க்ஷி என்ற முனிபுத்திரி உடன் பிறந்த பதின்மர்களை மணந்திருந்தாள் என்றும் கேள்வி. தெய்வம் போன்ற என் அன்னை பிட்சையைப் போல் சேர்ந்து உண்ணுங்கள் என்ருள். தாய் சொல்லே தருமம்'' என்றுர். குந்தி ''நான் ஐவரும் உண்ணுங்கள் என்றேன். எனக்குப் பொய்யில் மிகுந்த பயம் உண்டு. எவ்வாறு நான் பொய்யிலிருந்து விடுபடுவேன்?" என்ருள். வியாசர் துருபதனுடைய கரங்களைப்பற்றித் தனிமையான ஒரு இடத்திற் சென்று கூறுவா ராயினுர்.

## நளாயனி வரலாறு :

''அரசே! என் பெண் ஐவருக்கு மனைவியா? என்று வருந்தற்க. யாக காலத்தில் உன் மனைவி ''என் மகள் பாண்டவர்கள் ஐவர்கட்கும் மனைவியாக வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டாள். அவள் வேண்டுகோளின்படி யாஜோப யாஜர்கள் தங்கள் தவத்தினுல் இவளுக்கு ஐந்து பதிகள் இருக்குமாறு சங்கல்பஞ் செய்தார்கள். ஆகவே பாண்டவர் கள் ஐவருக்கும் இவள் உரியவள். இதற்கு முற் பிறப்பின் வினை காரணம். அதை உனக்குச் சொல்லுகின்றேன். துயரத்தை விட்டுக்கேள்.

நளவேந்தனுடைய மகள் இந்திரசேனை என்பவள். அவளுக்கு மற்றெரு பேர் நளாயனி என்பது. இவள் கற்பினுலும் அறி வினுலும் அழகினுலும் ஈடும் எடுப்பும் இல்லா தவள். அவளுக்கு ஏற்ற கணவன் விண்ணிலும் மண்ணிலும் அமையவில்லை.

தேவசபையில் இவளுடைய கற்பின் பொற்பை உரையாடினுர்கள். மௌத்கல்யர் என்ற முனிவர் ''நான் அவளுடைய கற்பின் உறுதியைச் சோதித்து அறிவேன்'' என்று இந்திரனிடம் கூறிப் பூதலம் வந்தார். நளனிடம் அனுமதி பெற்றுக் கன்னிமாடத்தில் மன்மதனுக்கும் எய்தாத எழிலுருவத்துடன் சென்று நளாயனி முன்நின்று தன்னை மணஞ் செய்து கொள்ளுமாறு கேட்டார். அவள் இசைந்தாள்.

மௌத்கல்யர் நளனிடம் நரைதிரை மூப் புடன் வந்து நளாயனி தன்னை மணந்து கொள்ள இசைந்தாள் என்றுர். நளாயனி கற்பு நெறி பிழைக்கலாகாது என்று உடன் பட்டாள். மௌத்கல்யர் நளாயனியை மணந்து கானிடை வாழ்ந்தார். இரவு பகலாக அவருக்குத் தொண்டு செய்தாள். எலும்புந் தோலுமாகவும் கடுங்கோபமும், நாற்றம் வீசும் வாயும், கொடுஞ் சொற்களும் உடையவரு மாகிய அக்கணவனுடைய எச்சிலைப் புசித்துக் கொண்டு, சாந்தமாக அம்மாதரசி பெண்ணறத் தினின்றும் ஒரு சிறிதும் வழுவாமல் வாழ்ந்தாள். அவருடைய விரல் அழுகி விழுந்த உணவையும், விரலை எடுத்துவிட்டு வெறுப்பின்றி யுண்டாள், அவரைத் தலையில் சுமந்து யாத்திரை செய்தாள். பொழுது விடியாமல் செய்தாள்.

நளாயனியின் சிறந்த உறுதியைக் கண்டு மௌத்கல்யர் மகிழ்ந்து ''உனக்கு என்ன வரம் வேண்டும்; கேள்'' என்று கேட்டார். நளாயனி தாங்கள் ஐந்து வடிவங் கொண்டும்

ஒரு வடிவுடனும் இருந்து என்னுடன் இன்புற்று வாழவேண்டும்'' என்றாள். அதுபடி மாதவ மணியாகிய அம்முனிவர் ஐந்து உருவங்களுட னும், சில சமயத்தில் ஒரு உருவத்துடனும் இருந்து நெடுங்காலம் அவளுக்கு இன்பத்தை நல்கினார். இந்திர உலகிலும், மகமேரு கிரியின் சிகரத்திலும், சந்திர சூரிய மண்டலங்களிலும் உலாவி மகிழ்ந்தார்கள். அவர் மலைவடிவங் கொண்டால், இவள் நதி வடிவங்கொண்டாள். அவர் மரமானால் இவள் அதைச் சுற்றிய கொடி யாவாள், இப்படி அநேக ஆயிரம் ஆண்டுகள் கூடி இன்புற்றார்கள்.

முனிவர் இந்த இன்பத்தினின்றும் விலக நினைத்து முத்தி நெறியைக் கடைப்பிடித்தார். நளாயனிக்கு இன்பத்தில் திருப்தி ஏற்பட வில்லை. அவள் அவரைப் பார்த்து என்னைவிட்டு விலகப்படாது என்று தடை செய்தாள். ''பெண்ணே! என் தவத்துக்கு இடையூறு செய் கின்றாய். ஆதலின், நீ துருபதராஜனுடைய மகளாகப் பிறந்து சிறந்த ஐந்து பதிகளை யடைந்து நெடுங்காலம் இன்பத்தை யடை வாய்'' என்று கூறிவிட்டு மறைந்துவிட்டார்.

நளாயனி சிவபெருமானை வேண்டித்தவஞ் செய்தாள். காற்றைப் புசித்துப் பஞ்சாக்கினிக் கிடையில் நின்று செய்த கடுந்தவத்திற்கு இரங்கி மகாதேவர் எதிர்தோன்றி ''உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டருளி னார். நளாயனி ''பதிம் தேகி'' என்று ஐந்து முறை கேட்டாள். "பெண்மணியே! ஐந்து கணவர்களை யடைந்து எல்லா நலன்களுடன் இன்புற்று வாழ்வாய்" என்று அருளிச் செய்தார். அவள், ''எம்பெருமானே! ஒருவ னுக்குப் பல மனைவியர் இருக்கலாம். ஒருத்திக் குப் பல கணவர்கள் இருப்பது தரும விரோத மல்லவா? நான் கற்பு நெறியில் நின்றவள். பெண்ணறம் பிழைபடக்கூடாதே?'' என்றாள்.

சிவமூர்த்தி "நளாயனி! நீ ஐந்து முறை பதியைக் கொடும் என்று கேட்டாய். உனக்கு அடுத்த பிறப்பில் இது நிகழும். இந்திரனைப் போன்ற உயர்ந்த ஐவரை நீ அடைவாய். அவ்வப்போது கன்னித்தன்மையை நீயடை வாய். அதனால் பெண்ணறம் பிழையாது. நீ பெரிய தேவகாரியத்தைச் செய்வாய். தவமும் இன்பமும் ஒன்று சேரமாட்டா. உனக்கு மட்டும் தவப்பயனும் இன்பநலனும் யோக மகிமையும் ஒன்று சேர்ந்து உதவும். நீ கங்கை யில் நீராடி எழுவாய். அப்போது அங்குக் காணப்படும் ஒருவனை இங்கே அழைத்துவா'' என்று அருளினார்.

(தொடரும்)

# இரு வரங்கள்

[ திருமலை நல்லான். இராமகிருஷ்ணையங்கார் ]

இராமாயணம் அரும்பெருங் காவியம், மிக்க புகழ் வாய்ந்தது; பக்தி வெள்ளமாகப் போற்றப்படுவது. பக்திக்கு உரிய பெருமை வாய்ந்தவனுக அது இராமபிரானைச் சித்திரித்துக் காட்டுகிறது.

## பெருமைக்குக் காரணம்

இராமபிரானது பெருமை இராமாயணத்திலே இரண்டு வரங்களாலே விளங்குகிறது. இராமாயணமென்னும் பக்தி வெள்ளத்துக்கு ஊற்றுவாயே இரண்டு வரங்கள்தாம். அவை யாவன- உலகம் எல்லாம் பரதனே ஆளவும், ஏழிரண்டு ஆண்டுகள் இராமன் கானகம் நண்ணவும் தயரதனிடம் கைகேயி கேட்டவை. இவ்விரு வரங்களே தயரதன் குடும்பத்தைக் குலைத்து உலகையே குலுக்கி முடிவில் மறத்தை விலக்கி அறத்தை நிலைக்கச் செய்தன. இறைவன் இராமனுய் வந்ததைப் பயனுறச் செய்தவை இவ்விரு வரங்களே. இராமபிரானது புகழ்க்கொடி படர்ந்து வளருவதற்கு முதற் கிழங்காய் அமைந்தன இவ்வரங்கள்.

## தெய்வச் செயல்

இராமபிரானது வாழ்க்கையைத் திருப்பிக் காட்டிலே புகவிட்டதாகயமைந்த இவ்வரங் கேட்கும் நிகழ்ச்சி, தெய்வச் செயலால் நிகழ்ந்த ஒன்றே. கைகேயியின் இயல்பினுக்கு இது சிறிது மொவ்வாதது. இராமபிரானிடம் மாசற்ற பாசம் கொண்டவள் கைகேயி. இராமனிடத்தும் பரதனிடத்தும் வேற்றுமையை நான் காணவில்லை என்கிருள் அவள். அச்சுறுத்திப் பேசும் கூனியின் கொடுஞ் சொல்லைக் கேட்கும் போதும் ''இராமனைப் பயந்த எற்கு இடருண்டோ''? என்று வினவும் கைகேயியினிடம் இராமன்பாலுள்ள பெற்ற பாசத்தை நாம் நன்கு காண முடிகிறது. இத்தகைய தாய்மை நிறைந்த அவளது கள்ளம் கபடமற்ற உள்ளம் மாறுபாடுறுவதற்குக் காரணம் தெய்வச் செயலன்றி வேறியாதாக இருக்க முடியும்? அடிமைப் பெண்ணுகிய மந்தரையின் மாற்றம் இம்மனமாற்றத்துக்குக் காரணமென்பது இயலாது. அரசாங்கத்திலேயே விரிசலை உண்டு பண்ணுமாற்றல் ஓரடிமைப் பெண்ணுக்கு அமைவது எங்ஙனம்?

## உண்டையுண்டது

இனி, இராமபிரான் இளமையில் உண்டை கொண்டு தன் கூனில் அடித்ததை மறவாது கறுவுகொண்டு மந்தரை, முடிசூட ஒட்டாது தடுத்து நிறுத்த மிக்க சீற்றம்கொண்டு கைகேயியிடம் சென்றதாகக் கவிஞர் பெருமான் கம்பன்,

''தொண்டை வாய்க்கேகயன்
[தோகை கோயின்மேல்
மண்டினுள் வெகுளியின்
[மடித்தவாயினுள்
பண்டைநா ளிராகவன் பாணி வில்லுமிழ்
உண்டை யுண்டதனைத் தன்னுள்ளத்
[துள்ளுவாள்''

என்று வருணித்திருப்பது கோபம் வரக் காரணமொன்றைக் காட்டுமேயன்றி அவளுக்குத் தடுத்து நிறுத்துமாற்றல் அமைந்திருப்பதற்கு ஆதாரமாகாதென்க.

## உதையுண்டது

இங்ஙனமே காஷ்மீர தேசக் கவிஞன் க்ஷேமேந்திரன் தனது ராமாயண மஞ்சரியில் இராமன் திருவடியில் முன்பு உதைபட்டதை மறவாது நினைத்து மந்தரை கோபங் கொண்டதாக வருணித்திருப்பதும் இங்கு அறியத் தக்கது.

வான்மீகத்தில் முடிசூடும் செய்தியைக் கேள்விப்பட்டதும் உடனே சினம்மூண்டு கூனி கைகேயியை அடைந்து பேசலுற்றாள் என்று கூறப்பட்டுள்ளது. சினம் மூளுவதற்குக் காரணம் காட்டப்படவில்லை. வியாக்கியானங்களிலும் விளக்கப்படவில்லை.

## சினத்திற்கு ஏது

முடிசூடுவதைத் தடுத்து நிறுத்துமளவிற்குச் சினம் மூள வேண்டுமானால் அதற்கு ஏதோ ஒரு காரணமிருந்தாக வேண்டும். வான்மீகி அக்காரணமின்னதென்று வெளிப்படுத்தவில்லை. பண்டைத் தமிழர் மந்தரையின் கூனில் உண்டை கொண்டு இராமனடித்ததைக் காரணமாகக் கண்டனர். ''கூனிகூன், உண்டை கொண்டரங்க வோட்டி உள்மகிழ்ந்த நாதன்'' என்று திருமழிசைப்பிரான் திருச்சந்த விருத்தத்தில் அருளியுள்ளமை காண்க. அதனையடியொற்றிக் கம்பன் தனது இராமாயணத்தில் அக்காரணத்தையே காட்டினான்.

இராமாயணம் உலகமெங்கும் பிரசாரத்திலுள்ளதொரு சிறந்த நூல், காஷ்மீரிகள் மந்தரையின் சினத்துக்குக் கண்ட காரணம் வேறுபட்டதாயுள்ளது. இராமன் திருவடியால் உதைபட்டதையே கூனியின் கொடுஞ் சினத்துக்குக் காரணமாகக் கண்டனர் அவர்கள். க்ஷேமேந்திரன் அதனைத் தனது நூலிற் காரணமாகக் காட்டினான்.

எக்காரணம் கொண்டு சினம் மூண்டாலும் தொழுத்தையான கூனிக்கு முடிசூடுதலைத் தவிர்த்து இராமனைக் காட்டுக்கு அனுப்பத் தக்கவல்லமையில்லை என்பது ஒருதலை.

## மாமனத்தின் கலக்கம்

இராமனைத் தான் பயந்ததாகக் கருதுகிறாள் கைகேயி. வளர்க்கவும் செய்கிறாள். இதனை ''தாய் கையில் வளர்ந்திலன் வளர்த்தது தவத்தால் கேகயன் மடந்தை கிளர் ஞாலம் இவனாள்'' என்று உலகமுமறிந்து பேசுகிறது. இராமனும் இவளிடம் தாய்ப்பசுவைக் காணும் கன்று போன்றுள்ளான். இங்ஙனிருக்க அடியாட்டி யொருத்தி சொன்னபடி நடக்கும் கொடுமைக்காரியாகக் கைகேயியைக் கருதுவது தகாது. அவளது மனம் மிகப் பெரியது. அத்தகைய மனமும் கடல் கலங்குவதுபோல் கலங்கியது. கடல் கலங்குமா? அது கண்ணனால் மந்தரத்தைக் கொண்டு கலக்கப்பட்டது. அது போலக் கடல் போன்ற மாமனமும் தைவத்தால் மந்தரையைக் கொண்டு கலக்கப்பட்டுவிட்டது. கலக்கிய மாமனத்தினளாய்க் கைகேசிவரம் வேண்டினாள் என்க. தெய்வச் செயலால் நேர்ந்த கலக்கம் தசரதனுக்குப் புலப்படவில்லை. அதனால் அவனுடைய பெரிய மனமும் மலங்குவதாயிற்று. மன்னவனும் மலக்கிய மாமனத்தினனானான். இராவணவதம் செய்த பிறகு இராமனைக் காணத் தயரதன் தேவ உருவில் விண்ணினின்றும் வந்த பிறகுதான் அவனுக்கு இவ்வுண்மை புலனாயிற்று. அவனே ''இப்பொழுதுதான் இராவணவதத்திற்காகத் தேவ இனத்தின் தலைவர்கள் பட்டாபிஷேகத்துக்குத் தடையேற்படுத்தியது எனக்குத் தெரிகிறது'' என்று இராமனைப் புருஷோத்தமா என விளித்துக் கூறியதாக வான்மீகி ராமாயணத்திற் காணப்படுகிறது.

''இதாநீம்து விஜாநாமியதா ஸௌம்ய ஷுரேச்வரை:, வதார்த்தம் ராவணஸ்யேதம் விஹிதம் புருஷோத்தம்''. *(யுத்த—122-187).*

## தேவரகசியம்

தேவர்களின் தலைவர்கள்கூடி இராமன் முடி சூடற்கு இடையூறு விளைவித்தன ரென்பதை முதலிற் கூருது நம்மையும் தயரதனையும் மலங்க வடித்து, முடிவில் இவ்வுண்மையைத் தயரதன் வாயிலாகவே வெளிப்படுத்துகிறுர் வான்மீகி முனிவர். தேவரஹஸ்யத்தை நிகழ்ச்சி நடக்கும் போதே வெளியிடாது முடிவிலும் தன்வாயினுலன்றித் தயரதன் வாயிலாகவே வெளியிடும் கவிவாணர் வான்மீகி முனிவரது திறமையும் உள்ளடக்கமும் உள்ளியுள்ளி ரசிக்கத் தக்கனவாயுள்ள.

அத்யாத்ம ராமாயணம், தயரதன் இராமபிரானுக்கு முடிசூட்ட முயலும்போது தேவர்கள் மலைமகளிடம் மண்ணுலகில் அயோத்தி எய்தி மந்தரைமீதும் பின்னர்க் கைகேயி மீதும் ஆவேசித்து முடிசூட்டைத் தடைப்படுத்தி விண்ணகம் மீண்டருள வேண்டும் என்று வேண்டித் தூண்டியதாக இத்தேவரகசியத்தை விளக்குகிறது. அதனையடியொற்றித் துளசிதாஸர் தமது ராமாயணத்தில் அழகுபட வருணித்திருக்கிறுர்.

நம் கவிஞர் பெருமான் கம்பனே முடிவிலும் இத்தேவரஹஸ்யத்தைத் தெளிவாக வெளியிடாது. மூடிமறைத்து வைக்கும் அழகு வியப்புக்குரியது. தேவ உருவில் வந்த நிலையிலும் இவ்வுண்மையைக் காணுமையால் கைகேயியினுற்பட்ட மனப்புண்ணுறுது நிற்கும் தயரதன் உள்வெதுப்புத் தீரத் தேவதேவனை இராமபிரானே இந்தத் தேவ ரஹஸ்யத்தை உய்த்துணரும் வண்ணம் தந்தையிடம் வெளிப்படுத்தியதாகக் கதையை யமைத்த கவிஞனது கற்பனைத் திறனை என்னென்பது. இராமபிரான் வெளிப்படையாகவன்றி மறைமுகமாய் இந்த ரஹஸ்யத்தை வெளிப்படுத்திய நயத்தை அடுத்த கட்டுரையிற் காட்டுதும்.

## மந்தரையின் உண்மைநிலை

மந்தரை என்னும் பெயர் வாய்ந்த அப்ஸரஸ் ஒருத்தி, தேவர்களால் தங்கள் பணியான இராவணவதத்திற்காக ஒரு பணியாட்டியாக அனுப்பப்பட்டுக் கேகய அரசனல் கைகேயிக்குச் சீதன வெள்ளாட்டியாகக் கொடுக்கப்பட்டாள். இது பாத்ம புராணத்திற் கண்டது. இதனை ஏற்புடையதாகச் சான்ருேர்கள் கொள்கின்றனர், வான்மீகி முனிவருக்கும் இதுவே உடன்பாடு.

தேவமாது ஒருத்தி கூனி வடிவத்தில் வந்துள்ளமையால் அவளது பிறப்பு வளர்ப்பு யாதொன்றும் தெரியாதென்று மூடுமந்திரமாகப் பேசுகிறுர் அடக்கம் வாய்ந்த வான்மீகி முனிவர், ''யதோ ஜாதா'' எங்கோ பிறந்தவளென்கிறுர் அவர் மந்தரையை. இதனல் வான்மீகி முனிவர் வேண்டுமென்றே இந்தத் தேவரஹஸ்யத்தை மறைத்து வைத்திருப்பது நமக்குத் தெரிகிறதன்ருே?

## யோக க்ஷேமம்

சரணடைந்த தேவர்கட்காக இராவணனை வதம் செய்ய எம்பெருமான் இராமனுய் வந்தானென்பது வெளிப்பேச்சு. ஆன்ம வர்க்கத்திற்கு இயல்பான பாரதந்திரியத்தை வெளிப்படுத்துவதே உள்நோக்கம். ஆதலின் தந்தை சொற்படி நடக்கவேண்டிய தனது பாரதந்திரிய நிலைக்கு ஏற்ப இராவணவதத்துக்காக வந்திருப்பினும் அரசாட்சியை ஏற்று நடத்த முற்பட்டான் எம்பிரான். ஆயின் தேவர்களின் பயனுன இராவணவதம் எங்ஙனம் கைகூடும்? அது கைகூடுவதற்காகத் தேவர்களாலனுப்பப்பட்ட மந்தரை முடிசூடலைத் தவிர்க்கப் பரதனுக்கு முடிசூட்ட வேண்டும் என்று வரம் கோரும்படி செய்தாள். முடிசூடல் தவிர்ந்தாலும் அயோத்தியைவிட்டு இராமபிரான் வெளியேருதிருப்பின் இராவணவதத்திற்கு வழி ஏற்படாது. வேறு நாட்டுக்கு வெளியேறினுலும் பயனில்லை. கானகத்தில் திரியும் அரக்கருடன் மோதலேற்படுவதற்காகக் கானகம் ஏகியாக வேண்டும். அதற்காக இராம

பிரானைக் காட்டுக்கு அனுப்புமாறு இரண்டாவது வரமும் கேட்கும்படி செய்து விடுகிறாள் மந்தரை,

பரதனுக்கு அரசு கிடைப்பது யோகமாகவும், இராமபிரான் கானகம் செல்வது க்ஷேமமாகவும் கைகேயிக்கு அமைகின்றன. புதிதாய்க் கிடைப்பது யோகமென்றும், கிடைத்ததைப் பாதுகாப்பது க்ஷேமம் என்றும் சொல்லப்படும்.

## முரண்படும் அறங்கள்

சரணடைந்த தேவர்களிடம் இராவண வதம் செய்வதாக வாக்குறுதியளித்து வந்து அவதரித்திருக்கிறான் எம்பெருமான். தந்தையிட்ட கட்டளையின்படி அவனே அரசாட்சியை ஏற்க இசைகிறான். சரண் அடைந்தோர் துயர் தீர்த்தன்றித் தன்பணியில் நாட்டம் செலுத்தாதவன், இன்று அடியாரல்லல் தவிர்க்காது தான் நாடாள இசைகிறான். வாக்குறுதியை முதலிற் காப்பாற்ற வேண்டுமானால் அரசாள இசையக் கூடாது. அரசாட்சியை ஏற்பின் வாக்குறுதி காற்றிற் பறந்து போகும். என்ன செய்வது? வாக்குறுதியைவிடத் தந்தை சொற்படி நடப்பதே சிறந்ததென்று முடிவுக்கு வந்தான் இராமபிரான். தன் சொல்லைவிடத் தந்தையின் சொல்லிற்கு மதிப்பளிக்கிறான் அவன்.

இரண்டு அறங்களுக்குள் முரண்பாடு இல்லாதபோது இரண்டையும் புரிதல் வேண்டும். முரண்படும்போது பொது அறத்தை விட்டுச் சிறப்பு அறத்தைக் கைக்கொள்ளல் வேண்டும். இங்குச் சொல் தவறாமைக்கும், பிறர் சொற்படி நடக்க வேண்டிய நிலையான பாரதந்திரியத்துக்கும் முரண்பாடு ஏற்பட்டுள்ளது. சொல் தவறாமை பொது அறம். பாரதந்திரியம் சிறப்பு அறம். முன்னது உடலெடுத்தவர் ஏற்பது, பின்னதோ தேகத்தின் தொடர்பின்றி நிற்கும் ஆன்மஸ்வரூபத்தின் தன்மை. முன்னதை விசிஷ்ட தர்மம் என்றும் பின்னதை நிஷ்க்ருஷ்ட தர்மம் என்றும் பகர்வர் பெரியோர். நிஷ்க்ருஷ்டமான பாரதந்திரியத்தை எவ்வகையானும் காக்க வேண்டும் என்பதைப் புகட்டுவதையே உள்நோக்கமாகக் கொண்டு அவதரித்தவனாதலின் ஆதர்ச புருஷனாகிய ராமன் பரதந்திரனாய், அரசாள உடன்பட்டனனென்க. அரச குமரனாகிய தனக்கும் பாராளுவது கடமை என்று நினைத்து அவன் உடன்படவில்லை. அங்ஙனம் நினைத்தால் அது சிறப்பு அறமாகாது. தன்னைப் பரதந்திரனென்று உணரும் போதோ சிறப்பு அறமாகிவிடுகிறது. இக்கருத்தினையே கவிச் சக்கரவர்த்தி கம்பன் ''தாதையப் பரிசுரைப்பத் தாமரைக் கண்ணன் காதலுற்றிலனிகழ்ந்திலன் கடனிதென்றுணர்ந்தும் யாது கொற்றவனேவியது அது செயலன்றோ நீதியெற்கென நினைந்து தன் பணி தலைநின்றான்.'' என்று உணர்த்துவதுவது கவனத்திற்கு உரியது.

அரசாளுவது அரசர்க்கு மூத்த மகனாய்ப் பிறந்த தனக்குக் கடமை என்பதை உணர்ப்திருந்தும் அக்காரணம் கொண்டு பாராளத் தலைப்படவில்லை. அரசனான தந்தையின் ஆணைப்படி நடத்தல் வேண்டுமென்றும் அக் காரணங் கொண்டே பாராளத் தலைப்பட்டானென்பதைக் கவனிக்க.

## முரண்பாட்டு நீக்கம்

பொதுஅறமும் சிறப்புஅறமும் முரண்படும்போது நாம் நடந்து கொள்ள வேண்டிய முறையைப் பாராள இசைவதன் மூலமுணர்த்திய இராமபிரான், முடிவில் முரண்பாட்டைத் தவிர்த்துத் தனது குறிக்கோளாகிய பாரதந்திரியத்தை உறுதிப்படுத்துவது எண்ணி எண்ணி வியந்து இன்புறத்தக்கதாயுள்ளது. தேவர்களுக்குக் கொடுத்த வாக்குறுதி வீணாகாதவாறு அத்தேவர்களைக் கொண்டே முடிசூடற்குத் தடை விளையச் செய்து, பாராளச் சொன்ன தந்தையே கானகமேகும்படி ஏவும் சூழ்நிலையை உருவாக்கி, எம்பெருமான் தனது பாரதந்திரியத்தை உறுதிப்படுத்திக் கொண்ட வித்தகம் வியந்து போற்றத் தக்கதன்றோ! பாராள உடன்பட்டதும் தந்தை பணியே; கானகமேகியதும் தந்தை பணியே என்பதைக் காண்க.

வான்மீகி முனிவர் ''ஸஜகாம வநம்வீரர்: ப்ரதிஜ்ஞாமநு பாலயந், பிதுர்வசநநிர் தேசாத்

கைகேய்யா: ப்ரியகாரணுத்'' என்று தந்தையின் ஆணையை நிறைவேற்றுவதற்காகவும், கைகேயியின் பிரீதிக்காகவும் தன் வாக்குறுதியை நிலைநிறுத்துமவனுய் வீரஞன இராமபிரான் கானகம் சென்றதாகச் சொல்லியிருப்பதும் கவனித்ததற்கு உரியது. சரணடைந்த தேவர்களின் காரியம் நிறைவேறுவதாயிருப்பினும் தந்தையின் உத்தரவே காட்டிற்குப் புறப்படக் காரணமென்று இராகவன் கருதினுனென்க.

காளிதாஸன்; அரசாளச் சொன்னபோது இராமபிரான் அழுதுகொண்டே இசைந்ததாகவும், காட்டிற்குச் செல்லும்படி கட்டளையிட்டபோது மகிழ்ச்சியுடனதனை ஏற்றுக் கொண்டதாகவும் (ரகுவம்சம் 12.77) கூறியுள்ளான்.

அழுவதற்குக் காரணம் தேவர்களுக்குத் தான் கொடுத்த வாக்குறுதி நிறைவேருமையால் அவர்களுடைய அல்லலை முதலில் தீர்க்காமலிருப்பது. மகிழ்வதற்குக் காரணம் அவ் வாக்குறுதி நிறைவேறும் வாய்ப்புக் கிடைத்தமையால் அவ்வல்லலை முதலில் தீர்ப்பது என்பது காளிதாஸன் கருத்து.

மல்லிநாதர் என்னும் உரையாசிரியரோ வேறு விதமாகக் கருத்து உரைக்கிறுர். அழுவதற்குக் காரணம் தந்தை தவம் செய்யத் தன்னை விட்டுப் போய்விடுவாரே என்கிற வருத்தமென்றும், மகிழ்ச்சிக்குக் காரணம் தந்தை சொற்படி நடக்கும் பேறு தனக்குக் கிடைத்தமை என்றும் கருத்தை விளக்குகிறுர் அவ்வுரையாசிரியர்.

தந்தை சொற்படி நடக்கும் பேறு பாராளும்போது வாய்க்காதா? காட்டிற்குப் போகும்போது தந்தையைவிட்டுப் பிரியும் வருத்தம் நேராதா? என்பதை அறிஞர்கள் கண்டு அவ்வுரையின் ஏற்புடைமைக்கு முடிவு செய்க.

## கைகேயியின் நன்றி

இங்ஙனம் கைகேயி கேட்ட இரு வரங்கள் தேவரஹஸ்யமாயமைந்து தயரதன் முதலியோர்களாலறியப்படாது கைகேயிக்குப் பேரிழுக்கையும், இராமபிரானுக்கு ஈடற்ற ஏற்றத்தையும் தந்துள்ளன. தன்மாங்கலியத்தை இழக்கும் அபாயத்தையும் அறியாத ஸாஹஸக் காரியாகத் தோன்றுகிறுள் கைகேயி. தன் மகனது நலமே பேணும் தன்னலக் காரியாகி விட்டாளவள். கொண்ட கணவனுக்கே அவளைப் பிடிக்கவில்லை, வெறுக்கிறுன். ''உன் கழுத்தின் நாண் நின்மகற்குக்காப்பின் நாண் ஆகுக'' என்று தன் ஆத்திரத்தைக் கொட்டுகிறுன் தயரதன். ''நின் மகன்'' என்கிறுன் பரதனை, தன் மகனன்மை தோன்ற. கைகேயி வயிற்றிற் பிறந்த குற்றத்திற்காகப் பரதனேடும் தன் தொடர்பையறுத்துக் கொள்கிறுன். தாயின்மீது வந்த சீற்றம் மகன்மீதும் ஏறிப் பாய்கிறது! ''இவளென் தாரமல்லள் துறந்தேன், மன்னேயாவான் வருமப் பரதன் தனையுமகனென்றுன்னேன்'' என்று கைகேயியோடு அவள் மகனையும் துறப்பதாக வெளிப் படையாகவும் கூறுகிறுன் தயரதன்.

இத்தகைய இழிநிலையைத் தானெய்தி அவதாரத்தின் பயனை எய்த இயலாது நிற்கும் இராமபிரானை இருவரங்களால் சத்யஸந்தனுக்கி அவதாரத்தின் பயனை எய்தும் வண்ணம் உயர்த்திய கைகேயி நன்றிக்குரியவளன்றே.

# திருவுத்தர கோசமங்கை

[ ந. ரா. முருகவேள், M. A., M. O. L. ]

**முன்னுரை :**

திருவுத்தர கோசமங்கை என்னும் சிறந்த தலம், இராமநாதபுரத்தில் இருந்து தென்மேற்கில், பத்து கல் தொலைவில் உள்ளது. இதற்கென ஒரு சிறு புகைவண்டி நிலையம் உண்டு. அந்நிலையத்தில் இருந்து நேர் தெற்கே, நான்கு கல் தொலைவில் திருவுத்தர கோச மங்கைக் கோயில், சிறப்புற விளங்குகின்றது. திருப்புல்லணை, திரு இராமேசுவரம், திருச்சுழியல், திருஆலவாய், திருமருதூர், திருப்புனவாயில் முதலிய தலங்கள் நாற்றிசைகளிலும் சூழ, அவற்றிற்கு நடுவே திருவுத்தர கோசமங்கை அழகுற அமைந்து திகழ்கின்றது.

**பண்டைத்தலம் :**

பாண்டிய நாட்டில் உள்ள தலங்களில், இது மிகவும் பழமையும், பெருமையும் வாய்ந்த தலம் ஆகும். இப் பண்டைப் பெருந் தலத்திற்குத் தேவாரப் பாடல்கள் ஏதும் கிடைக்கவில்லையாயினும், மாணிக்கவாசகர் தம்முடைய திருவாசகத்தில் இத்தலத்தினைப் பற்பல பதிகங்களின்கண் பெரிதும் சிறப்பாகக் குறிப்பிட்டுப் பாடியிருக்கின்றார்.

**பார்மேற் சிவபுரம் :**

திருவாசகத்தில் திருத்தசாங்கம் என்னும் பகுதியில், சிவபிரானுகிய பேரரசனுக்குரிய நாடு, மலை, ஆறு, ஊர் முதலிய பத்து வகைச் சிறப்புறுப்புக்களையும் குறிப்பிடுங்கால், ஊர் என்னும் உறுப்பாக வைத்துத் திருவுத்தரகோச மங்கைத் தலமே, மாணிக்கவாசகரால் பெரிதும் சிறந்தெடுத்துப் பேசப் பெறுகின்றது.

பத்தர் எல்லாம் பார்மேற் சிவபுரம்போற்
கொண்டாடும்
உத்தரகோச மங்கை ஊர்.
திரு.—6.

என்பது மணிவாசகர் அருளிய திருவாசகம், திருத்தசாங்கச் செய்யுள்!

இத்திருப்பாடலால் ஏறத்தாழ 1600 ஆண்டுகட்கு முற்பட்ட மாணிக்கவாசகர் காலத்திலேயே, இந்தச் சிறந்த தலமானது, ''இந்நிலவுலகில் விளங்கும் திருக்கயிலாயம் (சிவபுரம்)'' எனப் பக்தர்கள் எல்லோரும் புகழ்ந்து கொண்டாடும்படி, ஒப்புயர்வற்ற பெருமையினைப் பெற்றிருந்தது எனத் தெரிகின்றது.

**மகேந்திரம் :**

சிவபெருமான் வலை வீசிய திருவிளையாடல் நிகழ்த்தியதும், வலைஞர்கள்பால் மகளாய் வந்து வளர்ந்த அம்பிகையை மணம் புரிந்து கொண்டருளியதும், கடலிற் சுறு மீனின் வாயினின்று மீட்ட ஆகம நூல்களை உலகுக்கு வெளிப்படுத்தி அருளியதும், இந்தத் தலத்திலேயே ஆகும்.

''கேவேடர் ஆகிக் கெளிறது படுத்து
மாவேட்டாகிய ஆகமம் வாங்கியும்:
மற்றவை தம்மை மகேந்திரத்து இருந்து
உற்றஐம் முகங்களாற் பணித்து அருளியும்''

எனத் திருவாசகத்தில் வரும் கீர்த்தித் திருவகவல் வரிகள், இச்செய்திகளை உணர்த்துதல் காணலாம். மகேந்திரம் என்பது, திருவுத்தர கோச மங்கையின் ஒரு பெயரே என்றும் பெரியோர்கள் கூறுவது உண்டு.

**பெயர்க் காரணம் :**

இத்தலத்திற்குத் திருவுத்தர கோசமங்கை எனப் பெயர் அமைந்ததற்குரிய காரணம் பின் வருமாறு: உத்தரம்—உபதேசம்; கோசம்—இரகசியம், மறை பொருள். மங்கை—உமா தேவியார். முன்பு ஒரு காலத்தில் சிவபெருமான் உமாதேவியாருக்கு வேதாகமங்களின் மறை பொருள்களை இத்தலத்தில் உபதேசித்த காரணம் பற்றி, இதற்கு உத்தர கோசமங்கை எனப் பெயர் ஏற்பட்டது.

### மற்ஞெரு காரணம் :

இனி, இவ்வாறு அன்றி மற்ஞெரு வகை யாகவும் அறிஞர்கள் இப்பெயர்க் காரணத்தை விளக்குவர். உ—உயர்ந்த. தரம்—தகுதிப்பாடு. கோசம்—நூல். மங்கை—மங்கலம். மங்கலம் என்பது ஊர்ப் பெயர்களின் ஈற்றில் வரும் ஒரு விகுதி போல்வது. வரகுணமங்கலம் வரகுண மங்கை எனவும், சீவரமங்கலம் சீவரமங்கை எனவும் வருதல்போல, உத்தரகோச மங்கலம் என்பதே உத்தரகோச மங்கை என்று மருவியது எனவும் அறிஞர்கள் கூறுவர். ''உயர்ந்த தகுதிப்பாடு மிக்க ஆகம நூல்களை இறைவன் வெளிப்படுத்திய மங்கலம் அமைந்த தலம்'' என்பது இதன் திரண்ட கருத்து.

### தலப் பெயர்கள் :

இத்தலத்திற்கு மங்களபுரி, பிரமபுரம், சாத்துவிகத்தானம், வதரிகாரணியம் (இலந்தைக்காடு), பார்வதிபுரம், சித்தக்ஷேத்திரம் (சித்தர்கள் வாழுந்தலம், சிந்திப்பவை யாவும் சித்திக்கச் செய்யும் தலம்), தட்சிண காசி, சதுர்வேத புரி, கல்யாணபுரி (இறைவன் அம்பிகையை மணம் புரிந்து கொண்ட தலம்) எனப் பல பெயர்கள் உண்டு. இப்பெயர்களினுலேயே இத்தலத்தின் பெருமைகளை இனிது உணரலாம்.

### தீர்த்தங்கள் :

இங்கே அக்கினி தீர்த்தம், பிரமதீர்த்தம், இந்திர தீர்த்தம், சார்வதி தீர்த்தம், கௌமார தீர்த்தம், பதும தீர்த்தம், சீதள தீர்த்தம், தேவி தீர்த்தம், அரித்துவச கூப தீர்த்தம் எனப் பல சிறந்த தீர்த்தங்கள் அமைந்திருக்கின்றன.

### இறைவன் பெயர்கள் :

இத்தலத்தில் எழுந்தருளி விளங்கும் சிவ பெருமானுக்கு மங்களநாதர், பிரளய காலேசுவரர் (பிரளய காலத்திலும் அழியாதவர்), துரிசாபகர் (துரிசுகளாகிய குற்றங்கள் யாவும் போக்குபவர்) முதலிய பல பெயர்கள் வழங்கும். இவர், ''உத்தரகோச மங்கையுள் இருந்து வித்தக வேடங்காட்டிய இயல்பு'' பற்றி, இவருக்குக் காட்சி கொடுத்த நாயகர் என்றும்; அம்பிகையை இங்கு மணந்து கொண்டதனுல் கலியாணசுந்தரர் என்றும் பெயர்கள் வழங்குகின்றன.

### இறைவி பெயர்கள் :

இத்தலத்தில் உள்ள அம்பிகைக்கு, மங்களேசுவரி, மங்களதாயினி (நன்மைகளைக் கொடுப்பவள்), புட்பாதனி (மலர்களை ஆசனமாகக் கொண்டு பூசிக்கப் பெறுபவள்), சுந்தரநாயகி எனப் பல பெயர்கள் வழங்கும். அம்பிகை இங்கே இறைவன் பணித்தருளியபடி வலைஞர்களிடையே வந்து தோன்றி வளர்ந்து, பின்னர் இறைவனுல் மணந்துகொள்ளப் பெற்ருள். அதனுல் ''திரை சேர் மடந்தை'' எனவும் அம்பிகை இங்கு வழங்கப் பெறுவள். இச்செய்தி ''திரைசேர் மடந்தை மணந்த திருப்பொற் பதப் புயங்கா, வரை சேர்ந்து அடர்ந்தென்ன வல்வினைதான் வந்து அடர்வனவே'' (37) என வரும் திருவாசகம் நீத்தல் விண்ணப்பப் பகுதியாலும் தெளியப்படும்.

### திருவாசகப் பதிகங்கள் :

இந்தச் சிறந்த பெருந்தலத்தில் பிரமன், வேதமித்திரன், கந்தருவ கன்னியர், அரித்துவசன், நளன், அம்பிகை முதலியோர் சிவபிரானை வழிபட்டுப் பேறு பெற்றனர் எனத் தலபுராணம் கூறுகின்றது, எனினும், மாணிக்கவாசகப் பெருமான் இறைவனின் திருவருளாணைப்படி இங்குச் சென்று சிலகாலம் தங்கியிருந்து, இறைவனை வழிபட்டு, திருவாசகத்தில், நீத்தல் விண்ணப்பம், திருப்பொன்னூசல் என்னும் திருப்பதிகங்களை அருளிச் செய்துள்ளனர் என்பதே, இன்று இத்தலம் பெரிதும் சிறப்புடையதாகச் சிவநெறிச் செல்வர்களால் மதித்துப் போற்றப் பெறுவதற்குரிய காரணம் ஆகும்.

### மரகத நடராசர் :

இங்கே எழுந்தருளி விளங்கும் நடராசப் பெருமானின் திருவுருவம், மரகதம் என்னும் விலை மதிப்பு அரிய பச்சை நிறப்பளிங்கு மணியினுல் அமைந்து ஒளிரும் சிறப்பு மிக்கது. தில்லைப் பொன்னம்பலத்தில் ஆடல் புரியும் முன்னரே, நடராசப் பெருமான் இங்குத் திருநடனம் புரிந்தான் என்பது தலபுராணம். ஆதலின் இத்தலத்திற்கு **ஆதிசிதம்பரம்** என்றும், இறைவனுக்கு **ஆதிசிதம்பரேசுவரர்** என்றும் பெயர் உண்டு.

### அருணகிரிநாதர் :

ஏறத்தாழ 500 ஆண்டுகளுக்கு முன்பு விளங்கியிருந்த அருளாளராகிய அருணகிரிநாத சுவாமிகள், இத்தலத்திற்குச் சென்று வழிபட்டு மகிழ்ந்து இரண்டு அழகிய திருப்புகழ்ப் பாடல்களை அருளிச் செய்திருக்கின்ருர். ''உத்தம மாவளங்கொள் உத்தரகோச மங்கை'' என அவர், இத்தலத்தினை வியந்து புகழ்ந்து போற்றி இருத்தல், நாம் அறிந்து மகிழ்தற்கு உரியது.

### முடிவுரை :

இத்தகைய பெருஞ்சிறப்பு மிக்க திருவுத்தர கோசமங்கை என்னும் தெய்விகத் திருவருள் செறிந்த தலத்தில் எழுந்தருளி, அருள் வழங்கிவரும் மங்களேசுவரி அம்மை உடனுறை மங்களநாதப் பெருமானின் திருவடி மலர்களை, அன்புடன் வணங்கி வழிபட்டு, நாம் அனைவரும் நலம்பல பெற்று வாழ்வோமாக!

—ஆசிரியர்.

# நீத்தல் விண்ணப்பம்

(பொழிப்புரை)

[ ந. ரா. முருகவேள், M. A., M. O. L. ]

**முன்னுரை :**

உலகிலுள்ள மொழிகள் பலப்பல. ஒவ்வொன்றும் தனக்கென ஒவ்வொரு சிறப்பியல்பு உடையது. அவைகளுள் தமிழ்மொழி மிகவும் இனியது; சிறந்தது; பழமையும் பெருமையும் வாய்ந்தது; தெய்விக நலம் சிறந்தது. மணிவாசகர் 'தண்ணார் தமிழ்' என்றும், 'ஒண்தீந் தமிழ்' என்றும், தமிழ் மொழியைப் போற்றிப் பாடி மகிழ்கின்றார். அத்தகைய தமிழ் மொழியில் உள்ள நூல்களில், பக்தி நெறித் துறையில் மிகவும் தலைசிறந்து திகழ்வது, செந்தமிழ் நலமும் தெய்விக நலமும் மிக்கொளிர்ந்து மிளிரும் திருவாசகம்!

அஃது ஐம்பத்தொரு திருப்பதிகங்களும், அறுநூற்று ஐம்பத்தெட்டுப் பாடல்களும் கொண்டது. அதன்கண் அந்தாதி முறையிலும், அழகிய அரிய பற்பல உவமைகள் அமையும் வகையிலும், 'என்னைக் கைவிட்டு விடாதே' என இறைவன்பால் அழுது புலம்பி அரற்றிச் சொற்பொருட்சுவை நலன்கள் துளும்பும் நிலையிலும், ஐம்பது அழகிய இனிய பாடல்களால் இயன்று விளங்கும் ''நீத்தல் விண்ணப்பம்'' என்பது, தன்னிகரற்ற பெருஞ் சிறப்புடைய ஒரு திருப்பதிகமாகத் திகழ்கின்றது.

''மித்தை உலகினை அகற்றி,
விடாமல் எனை ஆண்டருள்க என்று,
அத்தர் அறிந்திட நீத்தல்
விண்ணப்பம் அறைந்ததுவாம்''

என்று பெரியோர்கள், இதன் பொருள் நலனை நமக்கு இனிது விளக்கியருளி யிருக்கின்றனர். 'நீத்தல் விண்ணப்பம்' என்னும் சொற்றொடருக்குக் 'கைவிட்டு விடாதே என்று வேண்டுதல்' என்பது பொருள். இதன்கண் மணிவாசகர், 'பிரபஞ்ச வைராக்கியம்' எனப்படும் 'உலகியற் போலி வாழ்க்கையிற் பற்றறுதல்' ஆகிய நிலையினை, இறைவன்பால் வேண்டிக் கொள்வதாகச் சான்றோர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

இறைவனது அருளைப் பெற விரும்பும் அன்பர்கள் யாவராயினும், இறைவன்பால் எப்போதும் இடையறாது விண்ணப்பித்துக்கொள்ளத் தகுந்த நிலையில், இச் சிறந்த திருப்பதிகம் இனிதமைந்து திகழ்கின்றது. இதன் அருமை பெருமைகள் அளவிடற்பாலன அல்ல. இதனை ஓதி வழிபடும் அன்பர்களை, இறைவன் ஒரு சிறிதும் கைவிட மாட்டான்; அஞ்சேல் என்று கையமர்த்திக் கருணை சுரந்து காத்தருள் புரிவான் என்பது திண்ணம். இத்திருப்பதிகத்திற்குச் சொல்லமைப்பு நெறி பிறழாமல், சுருங்கிய நிலையில், பொருள் தொகுப்புப் பொழிப்புரை மட்டும், இங்குத் தரப் பெறுகின்றது.

**பொழிப்புரை :**

கடைப்பட்டவனாகிய என்னை இரக்கங் காரணமாக, உடன் சேர்ந்து ஆட்கொண்டருளிய காளை ஊர்தியை உடையவனே! எளியேனைக் கைவிட்டு விடுவாயோ! வலிமை

மிக்க புலியின் தோலை உடுத்தவனே! என்றும் நிலைபெற்ற உத்தரகோச மங்கை யென்னும் தலத்தில் விளங்கும் அரசனே! சடையை உடையவனே! நான் தளர்ச்சியடைந்தேன். எங்கள் பெருமானே! எளியேனை ஏந்தித் தாங்கிக் கொண்டு காத்தருள்க.

(2) கொள்ளு என்னும் தானியத்தின் பிளவு அளவும் இடைவெளியில்லாத, அழகிய பரந்த தனங்களுடைய மகளிரின், கொவ்வைப் பழம் போன்ற சிவந்த வாயினது இதழினின்றும் விட்டுப் பிரியேன் என்றாலும், நினது சிறந்த தொண்டில் ஈடுபட்டு அதன் அகத்தே உள்ளேன்; நின் திருக்குறிப்பிற்குப் புறம்பானவன் அல்லேன்; ஆதலின் என்னைக் கைவிட்டு விடுவாயோ? வஞ்சகனாகிய யான் நின்னை நீங்கிப் புறத்தே செல்லவும், நீ என்னைக் கண்டுபிடித்து ஆட்கொண்டதற்குக் காரணம் என்ன? (என்னைக் காப்பதற்கே அன்றோ!)

(3) கருமை நிறம் பொருந்திய கண்களை உடைய மகளிரைப் பற்றிய, ஐம்புலன்களாகிய ஆற்றங்கரைக்கண், மரம் போல வேரூன்றி இருக்கின்ற என்னைக் கைவிட்டு விடுவாயோ? புகழ் மிக்கு விளங்குகின்ற திருவாரூர் என்னும் தலத்தில் வாழ்பவனே! உத்தரகோசமங்கைக்கு அரசனே! கச்சுப் பொருந்திய, அணிகலன்கள் பூண்ட தனங்களையுடைய, அம்மையை ஒரு பாகத்துக் கொண்டவனே! எளியேனைப் பாது காப்பவனே!

(4) மேன்மேலும் பெருகுகின்ற நினது அருளாகிய கையினால் வளைத்துப் பிடிக்கவும், விலகிச் சென்று இப்பொய்யுலக வாழ்க்கையில் இறுமாந்து களிக்கின்ற சிறியேனைக் கைவிட்டு விடுவாயோ? வெண்மையான ஒப்பற்ற பிறைச் சந்திரன் திகழுகின்ற சடைமுடியை உடைய, உத்தரகோச மங்கைக்கு அரசனே! தெளிந்த பொன்னையும் மின்னலையும் போன்ற அழகினை யுடைய பேரொளிப்பிழம்பே!

(5) செழித்து எரிகின்ற நெருப்பின்கண் புகுந்து விழுகின்ற விட்டிற் பூச்சியைப் போன்று, சிலவாகிய சொற்களையுடைய பெண்களின் பால், பலகாலும் சென்று விழுந்துகிடக்கின்ற சிறியேனைக் கைவிட்டு விடுவாயோ! தேன் தோய்ந்த வாயினையுடைய வண்டுகள் கிண்டு கின்ற, கொன்றை மலர் மாலையை அணிந்த முடியினையுடைய, உத்தரகோசமங்கைக்கு அரசனே! வழியில் நின்று தடுத்து நினது அருளாகிய கிடைப்பதற்கரிய அமிழ்தத்தை வலிந்து நீ வந்து உண்பிக்கவும், நான் ஏற்றுக் கொள்ளாமல் மறுத்து விட்டேனே! (என் அறியாமையும் தீவினையும் என்னே!)

(6) பாவியாகிய யான் உன்னுடைய அருளின் சிறப்பை அறியாமையினால், அதனை உண்ண மறுத்து ஒழிந்தேன். என்னுடைய மாணிக்கமே! அதுபற்றி அடியேனை நீ வெறுத்துக் கைவிட்டு விடுவாயோ? எனது தீவினையின் கூட்டங்களைக் கடிந்து ஓட்டி, அடியேனை ஆட்கொண்டு அருள்க! பெரியவர்கள், இழிந்த நாய்களைப் போன்ற சிறியவர்களின், பொய்மையாகிய குற்றங்களைப் பொறுத்து அருள் புரிவர் அல்லரோ!

(7) பொய்யே வடிவமாக உடைய என்னையும் ஒரு பொருளாக மதித்து ஆட்கொண்டு, ஒப்பற்றதாகிய நின் அருளின் மிகுதியால், என் பொய்ம்மையை மறைத்து, என்னை ஏற்றுக் கொண்ட மெய்ப் பொருளாக உள்ளவனே! என்னைக் கைவிட்டு விடுவாயோ? நஞ்சத்தை கண்ட கண்டத்தின்கண் கரிய நிறத்தை உடையவனே! நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசனே! சிவந்த திருமேனியை உடையவனே! இன்ப வடிவினனே! சிறியவனாகிய என் பிறப்பை ஒழித்தருள்பவனே!

(8) என்னுடைய குற்றங்களை நின்னுடைய சிறப்புமிக்க திருவருளானது ஒழிக்கின்ற தன்மை, எவ்வாறு என்று அஞ்சுகின்ற அடியேனை நீ கைவிட்டு விடுவாயோ? பகைவர்கள் அஞ்சுமாறு ஒலிக்கின்ற கிண்கிணி மாலையை யணிந்த, காளை ஊர்தியை உடைய, உத்தர கோச மங்கைக்கு அரசனே! தீவினை உடைய

என்னை இருபுறத்தும் ஐம்புலன்களோடு அச்சமும் பற்றி நின்று, இழுக்கின்றன. (இவற்றினின்றும் என்னைக் காத்தருள்க!)

(9) இரண்டு பக்கங்களிலும் நெருப்பினைக் கொண்ட உள் துளையை உடைய மூங்கிலாகிய கொள்ளிக் கட்டையின் உள்ளே அகப்பட்டுக் கொண்ட எறும்பைப் போன்று, நின்னை விட்டுப் பிரிந்து, தலைவிரிகோலம் அடைந்த என்னை, நீ கைவிட்டு விடுவாயோ? மேல் கீழ் நடு என்ற மூன்று உலகங்களுக்கும் ஒப்பற்ற தலைவனே! போர் செய்தற்குரிய மூன்று இலை வடிவினவாகிய நுனிகளையுடைய சூலப்படையை, வலக்கையில் தாங்கித் திகழ்கின்றவனே!

(10) சிறப்புமிக்கு விளங்குகின்ற நின் திருவடியை அடைக்கலமாக அடையப் பெற்றும், மனிதப் பிறப்பை வீணாக்கி வருந்துகின்ற சிறியேனை நீ கைவிட்டு விடுவாயோ? வண்டுகள் பயின்று பாடும் விளரி என்னும் இசை நிலை பெற்ற பூஞ்சோலைகளையுடைய உத்தரகோச மங்கைக்கு அரசனே! முப்புரங்களையும் பகைத்து, வலிமை மிக்க உறுதியான மேரு வாகிய வில்லினால் அழித்தவனே!

(11) ஐம்புலன்களும் முரண்பட்டுச் சிறியேனை வஞ்சிப்பதனால், யான் நினது அழகிய மலர் போன்ற திருவடித் தொண்டுக்கு வேறு பட்டு நிற்கின்றேன். அதுபற்றி என்னை நீ கை விட்டு விடுவாயோ? தீவினை உடையவனாகிய எனது நெஞ்சத்திலும் ஊறுகின்ற தேனே! நிலை பெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசனே! திருநீறு பொருந்தி, ஒளி மிகுந்து, விளங்கும் பொன்போன்ற திருமேனியை உடைய பெருந் தகையாளனே!

(12) பேரருட் குணமுடையவனாகிய நீ, எளியேனை ஆளாகக் கொள்ளவும், நின்னை விடுத்து, ஐம்புல இன்பங்களையே பொருளாக விரும்பி ஏற்றுக்கொள்ளும் இழிவு உடையவனாக, நான் இருக்கின்றேன். அதுபற்றி என்னை நீ கைவிட்டு விடுவாயோ? பகைவர்கள் அஞ்சும்படி அழிக்கும் தன்மையையுடைய, சூலப் படையை ஏவுதலில் வல்ல, உத்தரகோச மங்கைக்கு அரசனே! கொடுமையான குணங்களை உடையவனாகிய யான், பருகுதற்கு உரிய தெளிந்த இயல்புடைய அமிழ்த மயமான பெரிய கடலாக உள்ளவனே!

(13) கடலின் கண்ணே உள்ள நீரை நாயானது நாக்கினால் நக்கி உண்பதுபோல, நினது அருளாகிய பெரிய கடலின் கண்ணே உள்ளத்தை, மிகவும் செலுத்துதல் இல்லாத சிறியேனை நீ கைவிட்டு விடுவாயோ? உள்ளம் தளர்ந்து விடுதலில்லாமல், உறுதியாகப்பற்றி நிற்கும் உண்மை அடியவர்களின் உடலையே உறைவிடமாகக் கொண்டு, நிலைபெற்று வீற்றிருக்கும் உத்தரகோசமங்கைக்கு அரசனே! மலரின் இதழில் ஊறுகின்ற சுவைமிக்க தேனே! ஒளிமிக்க மணியே! நலம் பயக்கும் அமிழ்தமே! எனக்குக் கிடைத்த இன்பமாகிய கள்ளின் வெள்ளமே!

(14) இனிய நல்ல நீர்ப் பெருக்கின்கண் மூழ்கிக் கிடந்தும் நாக்குவற்றிப் போயினமைபோல, யான் நின் அருளைப் பெற்றும், பொய்யுலக வாழ்க்கையாகிய துன்பத்திலிருந்து இன்றும்கூட, நீங்குதற்குரிய ஆற்றலில்லாதவனாக உள்ளேன்! இத்தகைய என்னை, நீ கைவிட்டு விடுவாயோ? விரும்பி அன்பு செய்கின்ற உண்மை அடியவர்களின் உள்ளத்தில் வீற்றிருப்பவனே! நிலை பெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசனே! வஞ்சகச் செயல்களிலேயே நிலை பெற்றிருக்கின்ற எனக்குப், பொறி புலன்களால் எய்திக் களிக்க இயலாத, சிவானந்தமாகிய சிறந்த பெருங் களிப்பை வழங்கியருள்வாயாக!'

(15) மகிழ்ச்சிமிக்க உள்ளத்துடன், நினது திருவடியைக் கண்டு வணங்கப் பெற்றும், நீ என்னோடு இரண்டறக் கலந்து அருளும்படி, பொய்ம் மாயச் சேற்றினின்று வெளிப்பட்டு யான் வந்திலேன்! இத்தகைய என்னை நீ கை

விட்டு விடுவாயோ? மெய்ம்மையான ஒளி மண்டிலங்களுக்கெல்லாம், ஒளி உண்டாதற்கு ஏதுவாகிய பூப் போன்ற திருவடியை உடையவனே! உத்தரகோச மங்கைக்கு அரசனே! எளிமையாக வந்து அருள் புரிந்தவனே! என் தந்தை முதலியோர்க்கும் தலைவனே! எளியேனை ஆளாக உடைய, என் உயிருக்குத் தந்தையே!

(16) என்னை நோக்கி 'அப்பா அஞ்சாதே?' என்று சொல்லுபவர் இல்லாமல், வருந்தி நின்று அலைந்து இளைத்தேன். இந்நிலையில் என்னை நீ கைவிட்டு விடுவாயோ? நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசனே! மின்னலைப் போன்றவனே! உண்மையாகவே நினக்கு உவமை உரைக்க முற்படின், நீயே நினக்கு ஒப்பு ஆவாய்! எனக்குத் தாயையும் தந்தையையும் போல்பவனே! என்னுடைய பெறல்அரும் பொருளாக இருப்பவனே!

(17) மெய்ப் பொருளாக உள்ளவனே! வேறுதுணை இல்லாமல் தனித்து இருப்பவனாகிய எனக்குப் புகலிடமாக உள்ளவனே! நீ என்னைக் கைவிட்டு விடுவாயோ? நினது மெய்யான புகழைப் பழிக்கின்ற, பொய்ம்மையாளர்க்கு அச்சத்தை விளைவிப்பவனே! உண்மையன்பர்கள் வாரி உண்ணுகின்ற அருளாகிய அமுதமே! அழகிய சோலை சூழ்ந்த உத்தரகோச மங்கைக்கு அரசனே! சுட்டறிவால் நோக்குவார்க்கு இருளாகிய மறைபொருளாக உள்ளவனே! அருளுணர்வால் நோக்குவார்க்கு வெளிப்படுகின்றவனே! இம்மையும் மறுமையுமாக இருந்து எனக்கு அருள்புரிந்து வருபவனே!

(18) என் உள்ளத்தில் வீற்றிருந்து, அடிமையாகிய அறிவில்லாத என்னை ஆண்டு கொள்ளுக! விற்றுக் கொள்ளுக! அடகுவைத்துக் கொள்ளுக! என்று கூறுவது அல்லாமல் வேறு ஏதும் அறியாத புதியவனாகிய என்னை நீ கைவிட்டு விடுவாயோ? கடலில் தோன்றிய கொடுமை மிகுந்த நஞ்சை அமிழ்தமாகக் கொண்டு உண்டருளியவனே! நிலை பெற்ற உத்தரகோசமங்கைக்கு அரசனே! பிறப்பு ஆகிய நோயின் வாய்ப்பட்டு முடக்கம் அடைந்தவர்க்கு மருந்தாக உள்ளவனே!

(19) என்னுடைய வலிய வினையாகிய காட்டினை, அழிந்து ஒழியுமாறு, நினது பேரருளாகிய நெருப்பை இட்டுக் கொளுத்துகின்ற வீரம் மிக்கவனே! என்னை நீ கைவிட்டு விடுவாயோ? என் பிறவியை வேரோடும் களைந்து ஒழித்து, என்னை நீ ஆட்கொண்டு அருளுக! உத்தரகோச மங்கைக்கு அரசனே! மலைபோன்ற கொடிய யானையை உரித்து, வஞ்சிக்கொடி போன்ற உமையம்மையை அச்சம் உறச்செய்து விளையாடியவனே!

(20) கொழு கொம்பு இல்லாத மெல்லிய கொடிபோற் சுழன்று, வெதும்பி வருந்துகின்ற என்னை நீ கைவிட்டு விடுவாயோ? தேவர்களும் அணுகுதற்கு இயலாத மேலிடமாகிய சிவலோகத்தில் இருப்பவனே! உத்தரகோச மங்கைக்கு அரசனே! விண்ணும், மண்ணும், நெருப்பும், காற்றும், நீரும் ஆகியவற்றைப் படைத்தவனே!

(21) யானைகளின் கொடிய போரின் நடுவில் அகப்பட்டுக்கொண்ட சிறிய செடி என்று சொல்லும் படி, ஐம்புலன்களாலும் அலைக்கப்பட்டு வருந்துகின்ற எளியேனை, என்னுடைய தந்தையே, நீ கைவிட்டு விடுவாயோ? தீவினையுடைய எனது உள்ளத்தில் புகுந்து, தேன், பால், கருப்பஞ்சாறு, தேவாமிர்தம் என்பனவற்றைப் போன்று இனிமை பயந்து, என் உடலின் இறைச்சியையும் எலும்புகளையும் உருக்கிக் கரையச் செய்கின்ற ஞான வடிவினனே!

(22) ஒளிப் பிழம்பாக உள்ளவனே! திருநீற்றை நீரிற்குழையாமல் நிரம்பப் பூசி, அந்நீற்றொளியால் விளங்கும் வெண்ணிறம் உடையவனே! நீ என்னைக் கைவிட்டு விடுவாயோ? உண்மை அன்புடைய தொண்டர்களுக்கு எப்போதும் அருகில் இருப்பவனே! அன்பில்லாத

பொய்யர்களுக்கு எப்போதும் தொலேவில் இருப்பவனே! சுட்டறிவால் அறிதற்கரிய பழைய பெண் தன்மையையும், அலித் தன்மை யையும் உடையவனே!

(23) நின்னல் தரப்பெற்ற மனம் மெய் மொழி ஆகியவைகளேக் கருவியாகக் கொண்டு, குற்றங்களேயே மிகுதியாகச் செய்து, அன் பினேச் சுருக்கி விடுகின்ற, போலித் தொண்ட ளுகிய என்னே, நீ கைவிட்டு விடுவாயோ? விட் டால் யான் கெட்டொழிவேன். அடிமையாகிய என்னேத் தாங்கிக் காப்பவர்கள் வேறு எவரும் இல்லே. என் வாழ்க்கைக்கு முதற்பொருளாக இருப்பவனே! உன்னேயே அடிமையாகிய யான் புகலடைந்து மிகவும் நம்பி இருக்கின்றேன். எனக்குத் துணேயாக உள்ளவன் நீயே! (என்னேக் காத்தருளுக!)

(24) தகுதி உள்ளன இருக்கவும், தகுதி இல்லாதவற்றையே செய்கின்ற மயக்கத்தை யும் ஆரவாரத்தையும் உடைய தூயவன் அல் லாத தீயவனுகிய என்னே, நீ கைவிட்டு விடு வாயோ? மிகப் பெரிய துதிக்கையில் துளேயினே யுடைய நல்ல யானேயின் அகன்ற தோலேப் போர்த்தவனே! நெஞ்சை நின்பால் சேர வொண்ணுதபடி, நெய் நிறைந்த குடத்தை எறும்பு கள் நெருங்கிச் சூழ்ந்து கொள்ளுதல் போல, புலன் கள் மெல்ல நெருங்கிச் சூழ்ந்துகொண்டு தடை செய்கின்றன. (நீயே என்னேக் காத்தருளல் வேண்டும்!)

(25) எறும்புகளின் நடுவில் அகப்பட்டுக் கொண்ட நாங்கூழ்ப் புழுவைப்போல ஐம்புலன் களாலும் அரிக்கப்பெற்று வருந்திய பயனற்ற தமியனுகிய என்னே நீ கைவிட்டு விடுவாயோ? கொடிய கூற்றுவன் வலிமை குன்றும்படி, அவன் உடலில் பொருந்திய, மணம் மிக்க திருவடி மலர்களாகிய அவற்றையே பற்றுக்கோடாகக் கொண்ட சரியையாளர்க்கும், அவரின் மேம் பட்ட கிரியையாளர்க்கும், அவருக்கும் மேம் பட்ட யோக நிலேயினர்க்கும், பெறுதற்கரிய சாலோகம், சாமீபம், சாரூபம் என்னும் பதமுத்தி களே அளித்தருள்கின்றவனே! அடியவர்களாகிய சிவஞானிகள் மீண்டும் இங்கு வராத சாயுச்சியம் என்னும் பரமுத்தி நிலேயாக விளங்கும் பெருமையுடையவனே!

(26) பெரிய வெள்ளம் அற்றுப் போகச் சிறிய மீன் துடித்தாற்போலத் துணேயாகிய நின்னேப் பிரிந்ததனுல் அச்சங் கொள்ளும் தன்மை யுடைய எளியேனே நீ கைவிட்டு விடுவாயோ? பெரிய கங்கையாகிய மிகுந்து வழியும் நீர்ப் பெருக்கையுடைய மடுவின்கண், அலேமோது கின்ற சிறிய தோணியின் உருவத்தை ஒத்த, வெண்ணிறமுடைய குளிர்ந்த பிறையைப் பொதிந்து வைத்துள்ள சடையினேயுடைய வனே! ஞான வெளியில் திகழும் சிறந்த மாணிக்கமே!

(27) ஒளி மிகுந்த முத்தை ஒத்த அழகிய பற்களேயுடைய மகளிரின், கொங்கைகளாகிய மலேகளில் ஏறிச் சென்று, அறிவு குறைந்து இடறி விழுகின்ற அடியேனே, நீ கைவிட்டு விடு வாயோ? அன்பின் முதிர்ச்சியால் உடல் முழு வதும் நடுக்கமுற்று அழுகின்ற மெய்யன்பர் களின்பால், எளியேனேப் பிணித்து, ஆளாக ஏற்றுக்கொண்டு அருள்புரிந்து, அடியேனேத் தூய்மைப் படுத்துகின்ற மாணிக்கமணியே! நின் ஞானமயமான திருவடியை மீண்டும் எனக்குக் காட்டியருளுக!

(28) ஐம்புலன்களும் திகைப்பை உண் டாக்க, யானும் அதனுல் திகைப்பை அடைந்து, இவ்வுலகத்தில் ஒரு பொய்யான போலி வாழ்க்கை நெறியின்கண் அகப்பட்டுக்கொண்டு, நின்அருள் நெறியிலிருந்து விலகிச் செல்கின் றேன். அத்தகைய இழிந்த என்னே நீ கை விட்டு விடுவாயோ? விண்ணுலகமும், மண்ணுல கமும் ஆகிய எல்லாம் கலக்கமடைந்து, வருந்தக் கண்டு, கடலில் தோன்றிய நஞ்சத்தை அமுதம் போல உண்டு காத்தருளியவனே! கருணேக்கு இருப்பிடமானவனே! பொய்யுலக வாழ்வில் நிலே கலங்குகின்ற அடியேனேக் காக்கும் பொறுப்பு உடையவனே[ எனது குலதெய் வமே!

(தொடரும்)

—ஆசிரியர்.

# தகவுடையோர் புகழுரை

தமிழ்நாடு அரசின், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையின் சார்பில், வெளியிடப்பட்டு வரும் நமது திருக்கோயில் இதழ், கடந்த 12 ஆண்டு காலமாக, மிகவும் சிறந்த முறையில், நல்ல சமயத்தொண்டு புரிந்து வருகின்றது. தமிழகத்தில் மட்டுமன்றி, அயல் நாடுகளிலும்கூட, இவ்விதழ் பரவிச் சிறந்த பணியாற்றி வருகின்றது. சிறந்த பெரியோர்கள் பலர், இதனை அவ்வப்போது புகழ்ந்து பாராட்டி ஊக்குவித்து வருகின்றனர். அணித்தே, திருக்கோயில் இதழின் 12-ஆம் ஆண்டு நிறைவுபெற இருக்கும் நிலையில், சில நாள்களுக்கு முன்னர்க் கிடைத்த அறிஞர் ஒருவரின் பாராட்டுக் கடிதத்தினை, அதன் மூலத்துடனும் மொழிபெயர்ப்புடனும், இங்கு மகிழ்ச்சியுடன் வெளியிடுகின்றோம்.

—ஆசிரியர்.

**ஜி. ஏ. தர்மராஜன், M.A (oxon).,**
செயலாளர்,
பல்கலைக்கழக மாணவர்களின் செய்தி
அறிவிப்பு அலுவலகம்,
சென்னைப் பல்கலைக் கழகம்.
எண். 144/70

சென்னைப்
பல்கலைக்கழகக் கட்டிடம்
சேப்பாக்கம்,
சென்னை—5.
நாள்: 30—6—'70.

அன்பார்ந்த ஐயா,

பல்கலைக்கழகச் செய்தி அறிவிப்பு அலுவலகத்திற்குத் திருக்கோயில் இதழைத் தவறாமல், முறையாக அனுப்பி வருவதற்குத் தங்களுக்கு யான் நன்றி செலுத்த விரும்புகின்றேன்.

இந்தியாவில் வெளியிடப்படுவனவற்றுள், மிகமிகச் சிறந்ததொன்றாக, இத்துறையில் ஏராளமான செய்திகளைத் தன்னகத்தே பொதிந்துகொண்டு இவ்விதழ் விளங்கி வருதலை நான் காண்கின்றேன்.

என்னுடைய நன்றியின் அடையாளமாய், கணேசர் பற்றிய என்னுடைய கட்டுரையின் மறுபதிப்புப் பிரதி ஒன்றைத் தங்களுக்கு எனது பாராட்டியல் அன்பளிப்பாக, இதனுடன் இணைத்துள்ளேன்.

அன்பு வணக்கத்துடன்,

தங்கள் உண்மையுள்ள,
**ஜி. ஏ. தர்மராஜன்.**

**G. A. DHARMA RAJAN, M.A., (Oxon)**
The Secretary,
University Students' Information Bureau,
University of Madras.
No. 1444/70

University Buildings,
Chepauk, Madras—5.
Dated 30—6—70.

Dear Sir,

I like to thank you for regularly sending the journal "Thirukovil" to the University Bureau.

I find that it is one of the best publications in India, conveying a world of information in the field.

I am enclosing a complementary copy of the reprint of my article on Ganesha as a token of my thanks.

With kind regards.

Yours Sincerely,
(Sd.) **G. A. DHARMA RAJAN**



காஞ்சிபுரம் வட்டம் திருமாகறல் ஈசுவரர் கோயிலில், வார வழி பாட்டுத் துவக்க விழாவில், அறநிலைய அமைச்சர் மாண்புமிகு திரு. கே. வி. சுப்பையா, B A., அவர்களும், தவத்திரு குன்றக்குடி அடிகளார், M.L.C. அவர்களும், மற்றும் பல பெருமக்களும் கலந்து கொள்ளுதல். (8-4-70).



திருச்சி மாவட்டம் ஸ்ரீ உத்தமர் கோயில் தேவஸ்தான கல்யாண மண்டபத் திறப்பு விழாவில் மாண்புமிகு அறநிலைய அமைச்சர் திரு. கே. வி. சுப்பையா, B.A., அவர்களும், அன்பில் தர்மலிங்கம் அவர்களும், கலந்துகொண்டு சிறப்பிக்கப்பெறுதல்.

*Edited and Published by the Commissioner, Hindu Religious and Charitable Endowments (Admn.) Dept., Madras - 34.*
*Printed at General Printers, 14, Poonamallee High Road, Madras - 3.*